தெற்றெனவுற்ற[illegible]மையாமற்
பற்றுமாலையினும் [illegible]கெய்த்துத்
[illegible]றவொழியுற [illegible]
மயர்வறமதிநலம் [illegible]
பெற்றரிகீர்த்தனை பெட்புறப்பாடி
யுற்றமனத்தி லுறுதுயர்தீர்த்த
செம்மையார்புகழைத் தேர்ந்துசெப்பிடேற்
கெம்மனோர்க்கெல்லை யியலுமாறரிதே.

வெண்பா.

தீர்த்தனெனும்ஸ்ரீராமன் சேவடிக்கணன்புசெய்து
பூர்த்தியாயாங்கவன்சீர்ப் பொற்புகழைக் - கீர்த்தனைசங்
கீதமதனாற்பாடிக் கேடறுயர்தீர்த்திட்டாள்
வேதவல்லிமாது விரைந்து.

---

எட்மாஸ்டா

## ஆர். சடகோபஐயங்காரவர்கள் செய்தது. B. A.

திருவுறுமருமத்தொருபாஞ்சுடராம் தெய்வமீதரிபஜனைபெரு
மருவுறுமாலைவனைந்தணிவித்தாள் வளர்திருவான்மியூர்வாழும்
பொருவிலாவீராசாமிநன்மனைவி புண்யகோபாலகிருஷ்ணனற்றாய்
திருவுறுவேதவல்லியம்மாளாம் திசைப்புகழ்பெருக்கிடும்செல்வி.

—:0:—

இஃது

ஷை சர்வகலாசாலைத் தமிழ்ப்புலவர்

## சிங்கவனம். சுப்பிரமணியபாரதிகள்

செய்தது.

சீர்மேவுதிருவான்மியூர்மேவு சிறப்பினன்றிரள்கற்றோளான்
கார்மேவுகரதலத்தான் வீராசாமிப்புனிதக்கன்னன்பன்னி
வர்மேவுகோபாலகிர்ஷ்ணபூ பாலனைமுன்னீன்றாளுண்மைப்
பேர்மேவுவேதவல்லியம்மாளென் றுலகமெல்லாம்பேசுஞ்சீரள்.

சாத்துக்கவிகள்.

இத்தகையபெருமாட்டி யன்புருவெழிந்ததென விசைக்கற்பா ற்ருய், பத்தியுறுமரிபஜனை மாலைதனைப்பகர்ந்தனளாற் பழிச்சினோ ர்க்கு, முத்திதனையளித்திடுமெம் முதல்வனிங்கிராதியென்று மொ ழிந்துட்சென்ற, வித்தைபினுன்பின்தன்பின் மறையென்னவோட வருள் விமலன்மீதே.

——:0:——

இஃது

ஷை பிராஞ்சில்கூல் எட்மாஸ்டர்

டி. ஏ. கணபதிஐயர் செய்த

வெண்பா.

செங்குயில்கூவுஞ்சோலைச் சென்னைமயிலைக்கப்பால்
தங்குதிருவான்மியூர் தன்னில்வரு - துங்கன்
அணிவீராசாமிதுணை யாம்வேதவல்லி
திணிராமன்சீர்செப்பி னுள்.

——

, ..யும, ஆழ்வார்சபை
... பாகவதர்களுடைய திருவடித்தூசாயுமிராநின்ற
தஞ்சாவூர் டிஸ்ட்ரிக்ட் கோர்ட்டு ப்ளீடரும்
ஷை டவுன் முனிசிபல் கவுன்சலருமாகிய
கன்னிகைப்பேறு சீர்கருணீகர்

எதிராஜுபிள்ளை ராவ்சாகேப் அவர்கள்

செய்த

ஆசிரியப்பா.

சீர்வடமதுரைத் தென்பாற்சிறப்புற்
றோர்வளர்யமுனை யெனுநதிப்பாங்கர்
ஆயர்குலத்தி லாசுசெய்திருந்த
தூயவனுய துரிசறுசீர்த்தி
நந்தகோபால னலமிகுகாசிபன்
அந்தமிகுஞ்சி ரத்திரியயனென்
றின்னவாவழியி னியலவசுதேவன்
தனனெழிலமிசஞ சாறறுமிவ்வரசன்

## சாத்துக்கவிகள்.

திதிய நருளை தேவியெனச்சொல
துதியுடைத்தேவகி சொரூபமசோதை
இவ்விருவருஞ்செய் யெழிற்றவத்துதித்துக்
கவ்வையதிலராய்க் கண்ணனுமிராமனும்
மறைவாயொளித்து வளருநாளில்
குறையாப்பாறயிர் கூடியவெண்ணெய்
உண்டும்பசியோ டுறுகுறையிரப்பத்
தண்டலைவண்டுகள் பண்டலைப்பாடக்
கரும்பொடுசெந்நெற் கமுகுகளோங்க
இரும்புவிக்கணியா யிலகல்லிக்கேணித்
தென்பான்மயிலையைச் சேர்திருவான்மியூர்க்
கன்பாருருக்கொண் டடைந்ததுவென்ன
வந்துதித்திட்டோன் வளமுறுமுல்லைச்
சந்தமார்தாரோன் தமிழுறுமுதியோன்
செல்வந்தன்னிற் றிகழளகேசன்
பல்வகைவீட்டு நூல பகர்பொருளுணர்ந்தோன்
உம்பருமறியா வுயர்பதப்பெருமான்
சம்பிரதாயச் சாத்திரந்தேர்ந்தோன்

எண்ணான்கறமு மிசைவுறவியற்றி
நண்ணுச்சீர்த்தி நானிலத்துற்றோன்
விற்பநவிவேக விக்ரமவிஜயன்
கற்பத்துமழியாக் கவினுறுமிசையோன்
நந்தகோபன்றன் னயமுறுமமிசமாய்
வந்துமாநிலத்தில் வயங்கியவீரா

சாமியுமசோதை தன்னமிசமதாய்ப்
பூமியிலுதித்துயர் பொற்புகழ்வேத
வல்லியுஞ்செய்த மாதவமொருங்கே
நல்லுருவமைந்தென நானிலத்துற்றுச்

சங்காழிகைக்கொ ணங்கள்சீர்க்கண்ணன்
மங்களக்கௌசலை மைந்தனரங்கன்
வாதன்றெள்ளிய சிங்கனென்றைவகைச்
சாதவுருக்கொடு தருகைரவணிக்

களாதனிலமர்ந்து வாமுறுபாத்துவம்
புரையறுவியூகம் புகழுறுவிபவம்

## சாத்துக்கவிகள்.

அந்தரியாமி யர்ச்சனைவிம்பங்கள்
அந்தமாக்கொண்டில வற்புதருற்றி
பார்த்தசாரதியெம் பரமனிற்பரவி
தீர்த்தர்கட்கிறைவன் றிருமலர்க்கேள்வன்
பூபாலர்போற்றப் பொலிவுற்றிலங்கு
கோபாலகிருஷ்ணன் குளிர்மலர்த்தாளுக்
கென்றும்புலரா தியாணர்நாட்செல்வினும்
நின்றுகவினுறும் நீர்மையதாகி
ஆராவமுதக் காராவமுதெனத்
திராச்சுவையது செறிகவியமுதினை
இசையெனுங்கறியொடு மியலவளித்தனள்
வசையறுவேத வல்லிமாநிலத்தே.

## விருத்தம்.

இருமாபிற்குடிவிளங்க விருமையின்பமொருங்கெய்த வெற்றி லாரண்டர், திருமாபுபொலிந்திடநற் றிருவான்மியூர்வீரா சாமிப் போரால், வருமகிபன்பன்னியொளி வாய்வேதவல்லியெனு மாதுசீர் சால், பெருமகிமைத்தயாதரா மன்கழற்கோர்கவிமாலை பிணைந்திட் டாளே.

[illegible]

[illegible]

இராயப்பேட்டை வெஸ்லியன் காலேஜ்

தமிழ்ப்புலவர்

ரா. ஸ்ரீநிவாசமுதலியாரவர்கள்செய்த

ஆசிரியவிருத்தம்.

திருமருவுரூபபவேதாந்தப்ரதிஷ்டாபனாசாரியஸ்ரீமத்குரு
நீரஸ்ரீமார்கோயில்கந்தாடையண்ணனத்திருவடியிலாச்ரயித்த
திருவான்மியூரன்வீராசாமிபிள்ளையீன்றகோபால்கிருஷ்ணச்
செம்மல்ஸ்வீகாரமாதாவெனும்ஸ்ரீவேதவல்லியார்நிகழ்கனவினில்

அருமருவுபிரபவாதியீரெட்டில்சித்திரபானுவுண்டைப்பசித்திங்களில்
அறுமூன்றுமொருபஃதொடார்ந்தேதிசனிவாரமணிதருவிசாகநாளில்
அதிபக்தவற்சலனெனும்பிரானிளையவனுடன்பிராட்டியுமருவவர்
தன்புகொண்டென்னிடங்கீர்த்தனங்கேட்டிடற்காவலாறேமென்றதற்

தருமருவுமப்புனிதநீர்மையாளொன்றுமறிலோர்கிலேன்பாடவியலா
துணைத்திடவெனத்திருவுளங்கொண்டிரகுராமமோதும்ராமாயணத்தில்
உள்ளசீர்வீடணன்சரணமானகீர்த்தனையைநீயோதவென்ன
உள்ளபடியஃதுமறியேனெனப்பாடுதற்குன்னிறல்யாமெடுத்துப்

பெருமையுடனருள்வோமெனப்பெரியருக்கதைப்பேசிகாற்பத்தைந்துநாள்
பீடுசேர்புனர்பூசம்வரையில்பாராயணம்பெட்பொடுசெய்தியலகீதத்தை
பேரன்பினொடுவேதவல்லியார்செய்ததைப்பிறக்கனகவல்லிசொல்லப்
பெற்றதௌகித்திரன்விஜயராகவமால்பிறங்கவச்சிட்டனனரோ.

இஃது

திருவான்மியூர்

வீ. வேதவல்லியம்மாள் அவர்கள் தௌகித்திராகிய

தஞ்சாவூர் ஜில்லா உஜூர் காஷ்கீபர்

திரு. விஜயராகவபிள்ளை யவர்கள் செய்த

தனியன்கள்.

யர்வறவேண்டில்ராமன் மலர்ப்பதம்வழுத்தவென்றே
யர்வாமெனககளித்திட் டுலப்பிலாதென்னைக்காக்கும
யரற்றபாட்டிதாளைத் தூமலர்தூஉய்வணங்கிச்
செயிருறுமல்லல்போகச் சென்னியிற்சூடுநெஞ்சே.

மாயிருஞாலந்தன்னில் வாரத்தோடன்றெடுத்த
தாயொடுதம்பியற்ற தனியனைத்தானேயீன்ற
சேயெனப்பரிந்துகாத்த செறிபுகழ்வேதவல்லித்
தூயவள்பங்கயத்தாட் டுணைமுடிசூடுநெஞ்சே.

---

இஃது
சௌபாக்கியவதி
திரு. கோ. கனகவல்லித்தாயாரம்மா ளவர்கள்செய்த
தனியன்கள்.

கொச்சகக்கலிப்பா.

மற்றொன்றும்வேண்டா மனமேசீராமனது
பொற்றாமரைப்பதத்திற் புந்திசெலுத்தியவன்
பற்றாகநாளும் பகர்வேதவல்லிபதக்
குற்றேவல்செய்துன் குறைதீரவாழ்குவையே.

தேயமதிலெந்நாளு மெங்கள்குலதெய்வம்போ
லாயவன்பினென்ப்ராண நாயகனையாதரிக்குந்
தாயினுயர்தாயாகுந் தக்கசீர்வேதவல்லி
தூயபதந்தன்னைத் தொழுதெழுகென்பேதைநெஞ்சே.

பாயிரம் - முற்றிற்று.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# விபீஷணாழ்வான்

## ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகனைச் சரண் அடைதல்.

---

விருத்தம்.

சமுட— —படிக்கண்டு நால்வர் ஆன
மந்திரிகள் வரவிபீஷணனும் வந்தான்
நிசமுடனே ராமச் சந்திரன்முன் னேகி
நேர் ஆகக் கரங்குவியக் கண்ணீர் வார
அசையும்உடல் ஒடுக்கி அய்யன பதத்தில விழ்ந்தான்
அயோத்திராமா சரணம் என்னைக்காப் பாய்
தெசரதராமா சரணம் சரண்என்றே தோத்
திரம சொலவான் அதிலேஉத் தரமசொல்வானே.

க. இராகம்-புன்னாகவராளி-தாளம்-ரூபகசாபு.

பல்லவி.

ராகவனேசரணம்ரகு ராமாஉன்சரணம்
நமபினேன்விபீஷணன்உன்செம்பொற்பாதம்சரணம

அநுபல்லவி.

ஆகாதான்உடன்பிறந்த பாவந்தீர்ததிந்நேரம்
அபயமஉனக்கபயமஎன்னை ஆள்வதுநின்பாரம் (ராகவ)

சரணங்கள்.

பணத்துக்கொருஅம்புகொண்டு பாழிலெய்தாற்போலே
இணக்கமசொன்னேன்என்புத்தியை எறிந்துவிட்டான்சாமி
குணக்கெடுககநாயவாலைக் கூடுமோகூடாததனால்
துணிந்துவிடடுன்தனைஅடைந்தேன சுவாமிசித்தமஎனபாக
கியம (ராகவனே)

பாம்புக்குப்பால்வார்க்கவாகவாக்கப பயிஷத்தைக்கொப்பது போல், தும்புத்திரான்சொல்லைச்சொல்ல அகற்றிவிட்டான்சாமி, விம்புக்காரன்அவனுக்கினி மேலல்லவோதெரியும்உன்னை; காண்பித்துக்கொண்டேனைமூற்றிலும் காப்பாற்றஉன்றனக்கேகட்டு (ராகவனே)

௩. காடறியச்சீதைதன்னை மருடிக்கோர்செருப்பாகத்
தேடிக்கொண்டாய்என்றடிக்கடி தெரியச்சொன்னேன்சாமி
கேடுவருமுன்னேமதி கெட்டுவருமென்பதனால்
மூடன்ஆனான்அவன்தனைநான் முழுதுந்துறந்துனைஅடைந்
தேன் (ராகவனே)

௪. வானவர்ஆகியபயிர்க்கு வளர்ந்திடும்ராக்ஷதக்களையை
ஈனம்அறப்பிடுங்கவந்தான் இராமன்என்றேன்சாமி
ஜானகியால்ஒருபத்துத் தலையும்பனங்குலைபோல
மாநிலத்தில்விழுவானை மறந்துவிட்டென்றனைஅடைந்தேன்
(ராகவனே.)

———:o:———

௨. இராகம்-கமாஸ்தாளம்-ஆதி.

பல்லவி.

விபீஷணாழ்வான் திருவடிகளேசரணம்
விபீஷணாழ்வான் திருவடிகளேசரணம்.

சரணங்கள்.

௧. ராட்சசர்குலந்தன்னில் வந்தவதரித்து
ராட்சதசெய்கைகளைப் பரிகரித்து
சூழ்ச்சிவசனங்கள் சொல்லக்கேளாமையால்
துறந்துவிட்டண்ணனைத் தூயனடிபணிந்த(விபீஷ)

௨. அம்மன்சிறைகாக்க அருமைமகளைவைத்து
ஆதரிக்கச்செய்து அனுக்கிரகம்பெற்று
செம்மல்ஸ்ரீராமனிடம்சேர்ந்து சரணடைந்து
சிராசாட்சியும்பெற்றுச் சிறப்பனைத்தையும்பெற்ற(விபீஷ)

௩. என்னைச்சோதித்துத் தன்னைஎதிர்காட்டி
என்னூழ்வினைகளைத் துன்னுமலேவாட்டி
மன்னன்ஸ்ரீராமனுக்கென் மனவேதனையுரைத்து
மாபாவிவேதவல்லியை மனமிரங்கிக்காத்த(விபீஷ.)

———:o:———

௩. விருத்தம்.

கோயில்கந்தாடையண்ணன் குளிர்மலர்த்தாள்போற்றி
கோதில்வரவரமுனிதாட் கோகனகம்போற்றி
தூயவேதாந்ததேசிகன் பதங்கள்போற்றி
துயரறுக்குமெதிராஜர் துணைச்சரணம்போற்றி
மாயவினையகல்மாறன் மலர்க்கழல்கள்போற்றி
மன்னரங்கநாயகியார் பொன்னடிகள்போற்றி
ஆயறிவிலேன்செய்த பிழைபொறுப்பீர்போற்றி
அரியபுருஷோத்தமநின் அடியிணைகள்போற்றி.

———:o:———

௪. இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

பல்லவி.

உடையவரேசரணம் - பூதூரில்வாழும்
உடையவரேசரணம்.

சரணங்கள்.

௧. சேஷாவதாரரே ஸ்ரீகாந்திபதிதனயரே
இந்தஜெகந்தனில் வந்தப்பிரதாபரே (உடை)

௨. அஷ்டாக்ஷரத்தையிறைத் தருளும்பிரகாசரே
அனைவர்களையுமுய்யச் செய்தயதிராசரே (உடை)

௩. தங்குபுவனங்களைத் தான்படைத்தவனுக்குச்
சங்குசக்கரமளித்த மங்களகுணகர (உடை)

௪. உன்றன்திருவடியை யுவந்தவேதவல்லியாம்
உரியஅடியாளைப் பரிவினிற்காப்பீரே (உடை.)

———

௫. இராகம்-சஹானா-தாளம்-ஆதி.

பல்லவி.

மணவாளமாமுனியே உன்றன் மலரடிகளேசரணம்
மணவாளமாமுனியே உன்றன் மலரடிகளேசரணம்.

சரணங்கள்.

௧. உடையவர்பெருமையை வெளியிடவேணுமென்று
உற்றஐப்பசிமூலத்தில் பற்றிஅவதரித்தீரே (மண)

௨. * உன்றன்திருவடியை விரும்பியடைந்தேனையா
என்றன்கொடியஅறுத்து என்னைத்தவிக்கவிட்டாய் (மண)

௩. யாவிவேதவல்லி பாவந்தனையறுத்தன்
பாதந்தனையருளிப் பார்த்தாதரிப்பாயே (மண.)

## கீர்த்தனைகள்.

௬. இராகம்-கல்யாணி-தாளம்-ஏகம்.

பல்லவி.

ஆசாரியர் திருவடிகளேசரணம் - சுதாளைக்கருள்
ஆசாரியர் திருவடிகளேசரணம்.

அநுபல்லவி

தேசாசார்யனிருமும் திருவரங்கத்தின்மேவும்
ஆசார்யசங்களெல்லாம் அழித்தெனையுமாதைவும் (ஆசா)

சரணங்கள்.

௧. மணவாளமாமுனி அண்ணன் திருவடி
வாய்க்கும்படிகிருபை செய்தாரொன்று
மனமிகமகிழ்ந்து மகிழ்ச்சியுடனேவந்து
மதிக்கும்அண்ணனடி மருவியுய்ந்தேனுன் (ஆசாரியர்)

௨. பஞ்சஸம்ஸ்காரமும் பரிவுடன்தரித்தார்
பாவிக்கட்டாக்ஷமும் கூவியேவிரித்தார்
விஞ்சும்அஞ்ஞானங்களை மிகவும்பற்றறுத்தார்
மெய்யன் திருவடியை எய்தக்கிருபைசெய்தார் (ஆசாரியர்)

௩. அண்ணன் திருவடியை யடைந்தேன்-அன்றும்
அரியவினைகளெல்லாம் ஒழிந்தேன்-என்றன்
எண்ணியசெல்வத்தை யிழந்தேன்-பேதை
ஏழையைப்போலவே யிவ்வுலகிலலைந்தேன் (ஆசாரியர்)

௪. என்னவபசாரம் இயற்றினேனோ-நான்
என்பாவம்எதிர்வந்து இயன்றுநின்றனவோ
மன்னுமென்தோஷங்களை மனங்கொள்ளாமல்
மாதுவேதவல்லிக்கு மலரடியருளிய (ஆசாரியர்.)

---:0:---

௭. இராகம்- முகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

அனுமானேஉன் திருவடியேதஞ்சம்
அனுகிரகஞ்செய்ய இரங்காதோநெஞ்சம்.

அநுபல்லவி.

கனவேகமுள்ள வாயுகுமாரனே
கடலிலங்கையைச்செற்ற அடல்மிகுதீரனே (அநு)

சரணங்கள்.

பம்பாநதியோரத்தில் பார்த்துஸ்ரீராமனை
பக்தியுடன்கண்டு பணிந்துவந்துநின்று

தம்பிலக்ஷ்மணனுடன் [illegible]
ஜயசுக்ரீவன்முன்சென்று [illegible] (அநு)

௨. அய்யன்றனைக்கண்டு [illegible]
அறமில்வாலியைவீட்டிச் சிறியவனுமுடிசூட்டி
வெய்யகோபந்தணிந்து [illegible]யைக்கூடி
பிருமடையாளம்பெற்றுத் தருகடலைக்கடந்த (அநு)

௩. இலங்கைபதனைக்காத்த இலங்கணியைக்கொன்று
நலங்கொள்மனைபுகுந்து நாடித்தேடிக்காணமல்
கலங்கிமனந்தளர்ந்து அண்டசோகவனத்தில்
பலங்கிடைத்ததுவென்று பாய்ந்துதரிசித்த (அநு)

௪. கமலமலரணங்கைக் கண்டுமனமகிழ்ந்து
கனஅடையாளங்கூறிக் கணையாழியைக்கொடுத்து
விமலசூடாமணியை வியந்துகொடுக்கப்பெற்று
விந்தைஅசோகவனம் சிந்தித்துவிடக்கொன்ற (அநு)

௫. இந்திரசித்தின்பிரம பாசத்தால்கட்டுண்டு
இராவணனைக்கண்டு அவனெதிரில்நின்று
வந்தனங்கேளோனே ராமதூதனென்று
வாலைக்கொளுத்திவிட வாய்த்திலங்கையைச்சுட்ட (அநு)

௬. கடல்சூழிலங்கைசுட்டுக் காகுஸ்தனிடம்சேர்ந்து
கண்டேன்சீதையையென்று கையிற்சூடாமணிதந்து
மிடல்கொள்விபீஷணனை விளிததாதரிக்கச்செய்து
வேலையிலணைகட்டிக் கோவிலங்கையைச்சேர்ந்த (அநு)

௭. அய்யன்ராகவனுக்கு அமர்ந்தவாகனமாகி
அரக்கருடன்போர்செய்து அமிர்தசஞ்சீவிதந்து
உபயஅனைவருந்தான் அரக்கனுயிரைவென்று
உடனேசீதையைக்கண்டு உயர்ந்தாமனைச்சேர்ந்த (அநு)

௮. தேவியுடனேசுவாமி புஷ்பகவிமானமேறி
தேடவசந்தனை யெமலோகம்பிர்மலோகம்
தெய்வலோகமெல்லாம் சிரத்தையோடாராய்ந்து
தேடிக்கொண்டுவந்து சேனையுடன்சேர்த்த (அநு)

௯. பாரத்துவாசாச்ரமம் சேர்ந்துராமனேவப்
பாதனுயிரைக்காக்கப் பணிவாயெலாமுரைத்துப்
பணிந்துவந்தையனிடம பகர்ந்துவிருந்துண்டு
பண்டயோத்திசேர்ந்துயர்வு கொண்டதீர்த்தங்கொணர்ந்த

## சு. இராகம்-கல்யாணி-தாளம்-ஏகம்.

பல்லவி.

ஆசாரியர் திருவடிகளேசரணம் - சதாரமக்கருள்
ஆசாரியர் திருவடிகளேசரணம்.

அநுபல்லவி.

தேசார்காவேரிசூழும் திருவரங்கத்தின்மேவும்
ஆசர்பாசங்களெல்லாம் அழித்தெனையுறைகூவும் (ஆசா)

சரணங்கள்.

க. மணவாளமாமுனி அண்ணன் திருவடி
வாய்க்கும்படிகிருபை செய்தாரொன்று
மனமிகமகிழ்ந்து மகிழ்ச்சியுடனேவந்து
மதிக்குமண்ணனடி மருவியுய்ந்தேனன்(ஆசாரியர்)

உ. பஞ்சஸம்ஸ்காரமும் பரிவுடன்தரித்தார்
பாவிக்கட்டாக்ஷமும் கூவியேயளித்தார்
விஞ்சுமஞ்ஞானங்களை மிகவும்பற்றறுத்தார்
மெய்யன்திருவடியை எய்தக்கிருபைசெய்தார்(ஆசாரியர்)

ங. அண்ணன் திருவடியை யடைந்தேன்-மூன்றும்
அரியவினைகளெல்லாம் ஒழிந்தேன்-என்றன்
எண்ணியசெல்வத்தை யிழந்தேன்-பேதை
ஏழையைப்போலவே யிவ்வுலகிலலைந்தேன்(ஆசாரியர்)

ச. என்னவபசாரம் இயற்றினேனோ-நான்
என்பாவம்ஏதிர்வந்து இயன்றுநின்றனவோ
மன்னுமென்தோஷங்களை மனங்கொள்ளாமல்
மாதுவேதவல்லிக்கு மலரடியருளிய(ஆசாரியர்.)

——:O:——

## எ. இராகம்- மூகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

அநுமானேஉன் திருவடியேதஞ்சம்
அநுகிரகஞ்செய்ய இரங்காதோநெஞ்சம்.

அநுபல்லவி.

கனவேகமுள்ள வாயுகுமாரனே
கடலிலங்கையைச்செற்ற அடல்மிகுதீரனே (அநு)

சரணங்கள்.

க. பம்பாநதியோரத்தில் பார்த்துஸ்ரீராமனை
பக்தியுடன்கண்டு பணிந்துவந்துநின்று

தம்பிலக்ஷ்மணனால் சகலசேதியறிந்து
ஜயசுக்ரீவன்முன்பசனாறு யாவுமெல்லாமுரைத்த (அனு)

௨. அய்யன்றனைக்கண்டு அம்மன்பணிகள்தந்து
அறமில்வாலியைவீட்டிச் சிறியவன்முடிசூட்டி
வெய்யகோபந்தணித்துத் துய்யசேனையைக்கூடி
மிகுமடையாளம்பெற்றுத் தருகடலைக்கடந்த (அனு)

௩. இலங்கைபதனைக்காத்த இலங்கணியைக்கொன்று
நலங்கொள்மனைபுகுந்து நாடித்தேடிக்காணமல்
கலங்கிமனந்தளர்ந்து கண்டசோகவனத்தில்
பலங்கிடைத்ததுவென்று பாய்ந்துதரிசித்த (அனு)

௪. கமலமலரணங்கைக் கண்டுமனமகிழ்ந்து
கனஅடையாளங்கூறிக் கணையாழியைக்கொடுத்து
விமலசூடாமணியை வியந்துகொடுக்கப்பெற்று
விந்தைஅசோகவனம் சிந்தித்துஷ்டரைக்கொன்ற (அனு)

௫. இந்திரசித்தின்பிர்ம பாசத்தால்கட்டுண்டு
இராவணனைக்கண்டு அவனெதிரில்நின்று
வந்தகுரங்கேயாரென ராமதூதனென்று
வாலைக்கொளுத்திவிட வாய்த்திலங்கையைச்சுட்ட (அனு)

௬. கடல்சூழிலங்கைசுட்டுக் காகுஸ்தனிடம்சேர்ந்து
கண்டேன்சீதையையென்று கையிற்சூடாமணிதந்து
மிடல்கொள்விபீஷணனை விளித்தாதரிக்கச்செய்து
வேலையிலணைகட்டிக் கோவிலங்கையைச்சேர்ந்த (அனு)

௭. அய்யன்ராகவனுக்கு அமர்ந்தவாகனமாகி
அரக்கருடன்போர்செய்து அமிர்தசஞ்சீவிதந்து
உய்யஅனைவருந்தான் அரக்கனுயிரைவென்று
உடனேசீதையைக்கண்டு உயர்ந்தராமனைச்சேர்ந்த (அனு)

௮. தேவியுடனேசுவாமி புஷ்பகவிமானமேறி
தேடவசந்தனை யெமலோகம்பிர்மலோகம்
தெய்வுலோகமெல்லாம் சிரத்தையோடாராய்ந்து
தேடிக்கொண்டுவந்து சேனையுடன்சேர்த்த (அனு)

௯. பரத்துவாசாச்ரமம் சேர்ந்துராமனேவப்
பரதனுயிரைக்காக்கப் பணிவாயெலாமுரைத்துப்
பணிந்துவந்தையனிடம் பகர்ந்துவிருந்துண்டு
பண்டயோத்திசேர்ந்துயர்வு கொண்டதீர்த்தங்கொணர்ந்த

ம. பட்டாபிஷேகங்கொண்ட பட்டாபிராமனைப்
பணிந்துமனங்குளிர்ந்து பாதந்தாங்கிநின்று
பத்திசெயுமுனையே பணிந்துதுதித்தேனுய்யப்
பார்த்துவேதவல்லியைப் பரிவாய்க்காவாயைய (அனு.)

———:o:———

அ. இராகம்-பூபாளம்-தாளம்-திருபுடை.

பல்லவி.

எழுந்திரும் ராமா எழுந்திரும் - எங்கள்
இனையறுகுலதெய்வம் எழுந்திரும்.

அநுபல்லவி.

கொழுங்கொம்புசின்னங்கள் எக்காளம்பேரிகை
கூடிமுழங்கின எழுந்திரும் (எழுந்)

சரணங்கள்.

க மத்தளமல்லரி தாளமுழங்குது
மாதவஸ்ரீராமா எழுந்திரும்
ஒத்ததாரகைமுளைத் துதயகாலமும்வந்தது
ஒண்கதிருதித்தனன் எழுந்திரும் (எழுந்)

உ. அன்புளதந்தை தசரதரும்வந்தார்
அன்னையர்மூவரும் முன்னமேவந்தார்
தம்பியருடன்தக்க மந்திரிகளும்வந்தார்
தாமோதராஸ்ரீராமா எழுந்திரும் (எழுந்)

ங. அன்புள்ளவால்மீகர் கௌசிகரும்வந்தார்
அனேகரிஷிகளும் வசிஷ்டரும்வந்தார்
இன்புறுமறையோர் புரோகிதரும்வந்தார்
இணையறுமாதவா எழுந்திரும் (எழுந்)

ச. கின்னரர்நாரதர் கிம்புருஷரும்வந்தார்
கேளிக்கைமாதர்கள் அரம்பையரும்வந்தார்
என்அன்னைஜானகி எழுப்பிடவும்வந்தாள்
ஏகாந்தஸ்ரீராமா எழுந்திரும் (எழுந்)

ரு. துங்கஅநுமான்பல தீர்த்தங்கொணர்ந்தார்
துன்புறுவிபீடணர் துதித்திடவும்வந்தார்
அங்கதனோடு சுக்ரீவரும்வந்தார்
அநந்தஸ்ரீராமா எழுந்திரும் (எழுந்)

சா. தேசாதிதேசத்து ராஜர்கள்வந்தார்
சேவைக்குள்ளானோர் அனேகரும்வந்தார்
பாசாடவியினுழல் வேதவல்லியைக்காக்கும்
பரமதயாளனே எழுந்திரும்(எழுந்.)

௬. இராகம்-காம்போதி-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

௧. தசரதராமா தரணிபுகழ்ராமா — ராமராமா
தாரகவாச்சிய ஸ்ரீயப்பதிராமா — ராமராமா

௨. என்னபிழைசெய்தாலும் என்னைக்கைவிடலாமா — ராமராமா
என்னைநீகைவிட்டாலும் உன்னைநான்விடுவேனோ — ராமராமா

௩. அயோத்தியைவிட் டடியாளிடம்வந்தேனென்ற — ராமராமா
அதுகேட்டகங்குளிர்ந் ததிசயித்திருந்தேனே — ராமராமா

௪. சரணமடைந்தோரைச் சரண்தந்துகாப்பனென்ற — ராமராமா
சண்டாளியாமென்மீது சற்றுங்கிருபையில்லையோ — ராமராமா

௫. உன்னையேநம்பினேற் குன்னிலுங்கதியுண்டோ — ராமராமா
உன்பால்வந்தடைந்தேனை யென்பாக்கிவிட்டாயே — ராமராமா

௬. பகைவர்கள்முன்னென்னைப் பழிக்கவிடுத்தாயே — ராமராமா
பாரினிலெனைக்காண்போர் பரிகாசஞ்செய்யாரோ — ராமராமா

௭. கலிமகிமைகள்யாவுங் கைக்கனியாக்கினாய் — ராமராமா
கண்மணிச்செல்வத்தைக் கண்ணால்காணவேணும் — ராமராமா

௮. வேகமுடன்கருட வாகனமேறிவாராய் — ராமராமா
வேதவல்லிக்குக்கிருபை நீதயைசெய்தருள் — ராமராமா

௭. இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

என்குறைக்கென்னசொல்லுவேன் - ஓராகவா
என்குறைக்கென்னசொல்லுவேன்.

சரணங்கள்.

௧. முன்செய்தவஞ்சனைக் கென்செய்குவேனிப்போ
முடிவிலருள்செய்தென் கொடியவினையறுப்பாய் (என்கு)

௨. சீருளளன்பாவைக்குச் செல்வன்வேணுமென்று
திரிந்துஉன்குளத்தைக் கும்பிட்டுநின்றேனே (என்கு)

௩. செல்விக்குமைந்தனைச் சிறக்கத்தந்தாயென்று
சிந்தைமகிழ்ந்தவெனை நொந்திடவைத்தாயே (என்கு)

௪. தந்தருமைமகனைத் ததியில்மோசஞ்செய்தும்
மைந்தனைத்தந்தாயென்று மகிழ்ச்சியாயிருந்தேனே (என்கு)

௫. மாபாவிகள்பார்த்தாரோ வருந்திப்பெற்றமகன்
மனுவாகுங்காலத்திலென் மகிழ்ச்சிகுலைத்தாயே (என்கு)

௬. ஆகாதபாவிகள் ஆரென்னசெய்தாரோ
அவர்கள்மனங்குளிர அருள்செய்தாயேசாமி (என்கு)

௭. பார்த்திருந்துமென்னைப் பாழில்கவிழ்த்துவிட்டாய்
பாவிவேதவல்லியைப் பரதேசியாக்கிவிட்டாய் (என்கு.)

௰௧. இராகம்-புன்னாகவராளி-அடதாளம்.

கண்ணிகள்.

௧. வீரராகவாஉன்னை வேண்டித்துதித்தேனையா வீரராகவா
வெற்றிமகன்பொருட்டுன் னற்றாளைப்பூசித்தேன் வீரராகவா
௨. உன்னையேதெய்வமென் றுண்மையாய்நம்பினேனேவீரராகவா
உன்கோயிலைச்சுற்றி யுன்னடிபணிந்தேனே வீரராகவா
௩. மைந்தன்வேணுமென்று மாதவஞ்செய்தேனே வீரராகவா
மைந்தனைத்தந்தென்னை மதிமோசஞ்செய்தாயே வீரராகவா
௪. மைந்தன்முகம்பார்த்து மனமகிழ்ந்திருந்தேனே வீரராகவா
சிந்தனையொழித்தானன் சீறுற்றிருந்தேனே வீரராகவா
௫. தள்ளாதகாலத்தில் தவிக்கவிடுத்தாயே வீரராகவா
விள்ளாதவன்பனை விரைந்துபறித்தாயே வீரராகவா
௬. அனியாயம்அனியாயம் ஆருடன்சொல்லுவேன் வீரராகவா
அடியேன்செய்பாபமோ ஆரிட்டசாபமோ வீரராகவா
௭. கனகவல்லித்தாயோடு கலந்துயோசனைசெய்யாய் வீரராகவா
அனகவேதவல்லிக் கருவரமருளுவாய் வீரராகவா

௰௨. இராகம்-பிலஹரி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கனகவல்லித்தாயேஎன்னைக் கண்பார்த்தருள்வாய்நீயே.

அநுபல்லவி.

உனதையன்கொடுமையை உன்னுயோதாயே
பனகசயனனுன்றன் பார்வைப்படிசெய்வானே (கனக)

சரணங்கள்.

௧. வருஷமொன்றுடனே மாதமுமொன்றுமாய்
வருந்தியலைந்துன்றன் மலரடிவாழ்த்தினேன்
பெரியதாய்தந்தைநீ சகலபாக்கியமும்நீயே
பெருவாழ்வும்நீயேயென்று பெருமையாய்நம்பினேனே (க)
௨. என்பிழைசெய்தாலும் ஏழைமேல்கிருபைவைத்து
எனக்குமைந்தனைத்தந்தென் மனத்துயர்தீரம்மா
புன்பிறவியெடுத்துப் புலம்பித்திரிந்தேன்றாயே
புல்லியலமைவேத வல்லியைக்காப்பாய்நீயே(கனக.)

௰௩. இராகம்-மோகனம்-தாளம்-ஆதி.

பல்லவி.

என்னைக்கைவிடலாமோ - ஓராமாநீ
என்னைக்கைவிடலாமோ.

அநுபல்லவி.

நின்சரணடைந்தோரை நீ காப்பேனென்றுசொல்லி
நீசபதம்பண்ணி புரிந்தகாலமல்லவி(என்னை)

சரணங்கள்.

௧. அறியாதபாலகன் ஹரிஹரியென்றபோதே
அவனைரட்சித்து அனுக்கிரகஞ்செய்தாயே
கரியாதிமூலமென்றே கதறியவேளையில்
கடியவேகத்தில்வந்து காத்தாதரித்தாயே(என்னை)

௨. சின்னவயதினில் முனிபின்னேநீசென்று
சிலையைப்பெண்ணாக்கி கௌதமற்குத்தந்தாயே
தன்னண்ணன்முன்சொல்லிச்சரணடைந்தவிடணற்கு
தம்பிபோலிருவென்று தனியரசுதந்தாயே(என்னை)

௩. அபயமெனும்பாஞ்சாலிக் கதிவேகமாய்ச்சென்று
அவமானம்வாராமல் அளவில்துகில்தந்தாயே
உபயதிருவடியி லென்மனதைநிறுத்தி
ஒப்பிலாப்பட்சம்வைத் தவப்புடனாள்வாயே(என்னை)

௪. உன்னைநம்பினதும் பொய்யோஎன்கர்மமோ
உரையாய்என்பாவத்தை உனக்கென்னவர்மமோ
நன்னயமானவேத வல்லியைநீகாத்து
நலமாயனுக்கிரகஞ் செய்வாய்வினைதீர்த்து(என்னை.)

—:0:—

௰௪. இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

இந்தவிதிக்கென்னசெய்குவேன் - ஆஆராமா
எப்படிநானினி யுய்குவேன்.

அநுபல்லவி.

இந்தவாதையனுபவிக்க எந்தனுலாகாதையா
தந்திரமாயருளுஞ் சங்குசக்கரக்கையா(இந்த)

சரணங்கள்.

௧. அநியாயஞ்செய்யவும் அடுக்குமோஉன்றனக்கு
மனுவாருநகாலத்தில வருசிததாயென்றனக்கு (இந்த)

உ. வம்சத்தில்மணிபோல்வாழ் மைந்தனைமறைத்தாயே
சம்சயமில்லாமலே மலடொனவைத்தாயே (இந்த)

ங. கலத்திலேசோறிட்டுக் கையைப்பிடிப்பாரைப்போல்
குலம்விளக்கும்செல்வத்தைக் கொண்டுநீபோனாயே (இந்த)

ச. உன்னைநம்பினோர்க்குக்குறையில்லையென்றிருந்தேனே
என்கைக்கிளியைநீ ஏன்பிடுங்கிக்கொண்டாயோ (இந்த)

ரு. அவனியிலென்றனை அழுதுபுலம்பவிட்டாய்
இனிக்கவலைகொண்டே பதறுதெவர்க்குமெட்டாய் (இந்த)

சா. ஐயையோராகுராமா அநியாயம்செய்தாயோ
முன்செய்ததீவினையோ நீசெய்தவஞ்சனையோ (இந்த)

எ. மக்களுடன்வாழ்வோர் வலதுகள்பேசாரோ
துக்கமுண்டாக்கியதால் தூறுமல்விடுவேனோ (இந்த)

அ. ஆதாரர்முன்னென்னை அவதிப்படவிட்டாயே
ஆதரித்தாற்றுவாரார் அத்தாநீகைவிட்டாயே (இந்த)

சு. எத்தனைநாளைக்குநான் ஏங்கித்துதிப்பேனையா
கத்தும்வேதவல்லிக்குக் கருணைகடாட்சம்செய்யாய் (இந்த.)

—:0:—

மரு. இராகம்-சஹானா-தாளம்-ஆதி.

பல்லவி.

கருடவாகனே உன்னையேநம்பினேன் கதிவேறேயாரையா.

அநுபல்லவி.

வருடம்பலபலவாய் வாழ்நாளேவீணிலே
வையகத்தில்கழித்துன்னை மறந்தேனுனையாலே (கருட)

சரணங்கள்.

க. கள்ளிமரம்போலவே நெடுகவளர்ந்தேனையா
காய்கனியில்லாத கள்ளிநான்மெய்யா
ஒள்ளியதாய்தந்தை குருதெய்வமும்நீயே
உற்றவனுமந்த வாகனத்தில்வருவாய்நீயே (கருட)

உ. உன்னைத்தெரிசிக்க ஆவலுடனேவந்தேன்
என்னபாவஞ்செய்தேன்கொடியறுத்தானென்றாய்
சென்மவந்தகியான என்னையலையவைத்தாய்
சீரும்சிறப்புறுமோ தேவரொவர்க்குமெட்டாய் (கருட)

௩. ஆபத்பாந்தவா ஆஆ அநாதரட்சகா
ஆட்பட்டோருக்குநீ அநுக்கிரகஞ்செய்யாயா
பாவநாசனனே பதிதபாவனனே
பட்சிவாகனனே பட்சமாய்நீ பாராயா (கருட)

௪. இன்னமும்பூமியி லிருக்கலாகாதையா
என்னைக்கண்பார்த்துநின் னடியிற்சேர்த்திடுமையா
கன்னலமுதநீயே கலைவேதவல்லிக்குக்
கனமோசஞ்செய்யாமல் கருணையுடன்காராயா (கருட.)

———:0:———

௰௬. இராகம்-முகாரி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

நம்பினேன்நம்பினேன் நாரணனேஉன்னை
நல்லமனதுடன்வந் தாதரிப்பாய்.

சரணங்கள்.

௧. துஷ்டர்களைக்கொன்று இஷ்டர்களைக்காக்க
திருவடமதுரையி லவதரித்தவுன்னை (நம்பி)

௨. வசுதேவருக்குநீ மகனாகவந்து
மாய்கையினால்கோ குலம்புகுந்தஉன்னை (நம்பி)

௩. கோபியர்களைவெகு கோலாகலஞ்செய்து
கோவர்த்தனந்தாங்கி மழைதடுத்தவுன்னை (நம்பி)

௪. வித்தைகள்கற்பித்த வேதியருக்கன்று
வெகுமதியாகப்பா லகனைத்தந்தஉன்னை (நம்பி)

௫. பஞ்சவர்களைக்காக்கத் தூதாகச்சென்று
பாரதமுடிக்கச்சா ரத்தியஞ்செய்தவுன்னை (நம்பி)

௬. மாமனைக்கொன்று வடமதுரைதன்னை
மருடந்தரித்துக்கொண்ட மாதவனேஉன்னை (நம்பி)

௭. வேறேகதியில்லை வேணுகோபாலா
வேதவல்லிக்குநீ கிருபைகூர்ந்தருளாயா (நம்பி.)

௯எ. இராகம்-காபி-அட தாளம்.

பல்லவி.

மோசஞ்செய்யாதே - ஓராமா
மோசஞ்செய்யாதே.

அநுபல்லவி.

மோசஞ்செய்யத்தானோ என்னைமோகிப்பித்தாய் (மோசஞ்)

சரணங்கள்.

க. கடைக்கண்ணால்பார்த்தால் ஓராமா
என்கவலைகள் தீராதா
அடைக்கலமெனில் அனியாயம்செய்யலாமா (மோச)

உ. உன்னாலாகாதகாரியம் ஓராமா
பின்னாராலாகு மையா
உன்னைச்சரண்புகுந்த என்னைச்சோதிக்கலாமா (மோச)

௩. புத்திரியானல்லவோ ஓராமா
என்புத்தியைக் கலைக்கலாமா
சத்தியமில்லாத இரணியன்குடல்பறித்தாய் (மோச)

௪. மாமனைக்கொன்றாப்போல் ஓராமா
என்மகவைக்கொல்ல லாமா
ஏமனைஎதிர்க்க உன்னாலாகாமற்போச்சா (மோச)

ரு. வேகமுடன்வந்து ஓராமா
வேதவல்லியைக் காத்து
சாகசமாகவே வேதனைகளைத்தீராய் (மோச.)

———:0:———

௯அ. இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

திருவேங்கடத்தில்வாழ் திருவின்மணாளனே
ஜெயமாலையணி தோளனே.

அநுபல்லவி.

உருவேங்களைக்காக்க வுவந்தசக்கரக்கையா
மருவுமேழ்மலையின்மேல் அலர்மேல்மங்கைமெய்யா (திருவே)

க, உன்னையேநம்பினேன் வேறேநாதியில்லை
உற்றவனெனக்கேனு வைத்தாய்பலதொல்லை
சென்னிமுடியிறக்கிச் செல்வனுடனுனே
திருமலைக்குவந்து செலுத்தவிருந்தேனே(திரு)

உ, இனியெங்கேசெலுத்துவே னையாவேங்கடவா
ஏனுனிப்படிச்செய்தா யென்னைக்கைவிடவா
கலியுகத்திற்கனிவாய் கதிவேறில்லையென்று
கருதும்பாகவதர் கருள்செய்வீரோநின்று(திரு)

௩, தம்பதிகளாய்வரவைப் பூட்டும்பூட்டிக்கொண்டு
சார்த்துபிச்சைகொண்டு சந்நிதியைக்கண்டு
தெம்பாய்ச்சண்டாளினான் தெளிந்தன்பாய்ப்பார்த்தேனு
சேடனெனும்பொன்மலை மேவியுன்மகிழேனு(திரு)

பாரிலென்னைப்பார்த்துப் பரியாசஞ்செய்யவிட்டாய்
பதைக்குதேஎன்னுட லெரியுதேகுடல்மட்டாய்
வேரிற்பவளகிற மேவியமைந்தனை
வீட்டினுய்கிருபையின்றிப் போமேஇங்கிந்தனை(திரு)

௫. கொடும்பாவிகொள்ளென்றுகொடுத்தஎன்செல்வத்தைக்
கொண்டுபோனயார்க்குச் சொல்வேனிக்கர்மத்தை
அரும்பாதகிவேத வல்லிக்கொருவரப்பா
ஆதரிப்பாயிப்போதே போதக்கண்பார்த்தப்பா(திரு.)

---

௰௬, இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயாஉன்னையேநம்பினேன் - என்னைப்பெற்ற
ஐயாஉன்னையேநம்பினேன்.

அநுபல்லவி.

ஐயாநான்நம்பினது பொய்யோஅல்லதுமெய்யோ
வையகஞ்சொல்லாதோ வாயாஐயோ(ஐயா)

சரணங்கள்.

க, தாயேசீதையென்றுந் தந்தையேநீயென்றும்
காலத்தில்சத்தியமாய் நம்பினேனன்றேனன்றும்
வாயைத்திறந்தோர்வாக்குஞ்சொல்லாதென்செல்வத்தை
மகிழ்வாய்க்காவாமல்விட்டாய் இதுவோவுன்வித்தை(ஐயா)

உ. மார்க்கண்டன்துதிசெய்ய மாசில்சிவன்வந்து
மகிழ்வாயவனைக்காக்க மாகாலனைகொந்து
பார்க்குளொவரும்மெச்சச் சிரஞ்சீவிபட்டந்தந்து
பாதுகாத்தாரேயுனக் கில்லையாமனதுவந்து(ஐயா)

ங. காலனைச்செயிக்கஉன் கையாலாகாதோஐயா
கனமோசஞ்செய்தென்னைக் கடக்கவிட்டதுபொய்யா
சீலமறையோர்தொழும் சேவைக்குள்ளானோனே
தேடியலையவிட்டாய் தெவிட்டாதசெழுந்தேனே(ஐயா)

ச. தந்தைதாய்கண்பார்த்தால் மைந்தனுங்கெடுவானோ
சாமீநீவஞ்சித்தாலும் உன்னையான்விடுவேனோ
நிந்தனைபோமாஎன்னைக் காட்டிக்கொடுக்கலாமா
நிஜமாம்வேதவல்லிமேல் கணையுந்தொடுக்கலாமா(ஐயா.)

---

உய. இராகம்-சௌராஷ்டகம்-அடதாளம்.

பல்லவி.

ஓடிவாகிருஷ்ணா-நீ-என்முன்னாக-ஓடிவாகிருஷ்ணா.

அநுபல்லவி.

பாடியில்விளையாடும் வேணுகோபாலா
வாடியிருக்குமென்னைப் பாலிப்பாய்வெகுலீலா(ஓடிவா)

சரணங்கள்.

க. என்னுடன்வாதுகள் செய்யாதே-இனி
உன்னுடன்வாதாட வையாதே
பக்தவற்சலனென்று பாரிற்பேசுவாரோ
பாவிக்கிரங்காவிட்டால் பலருமேசுவாரே(ஓடி)

உ. ஆடுமாடுகளை யங்கேவிடுத்துநீயும்
அருமைமைந்தனைக்கொண்டு மனவேகமாகவந்து
நாடித்தட்சணையாகச் சுதனைக்கொடுத்தாய்பொய்யே
காட்டில்பாவியாக ஏன்படைத்தாயென்மெய்யே(ஓடி)

ங. சூதுகள்செய்யாதேசொன்னேன்சொன்னேன்கிருஷ்ணா
சுதனைக்கொண்டிப்போ சுறுக்காய்வருவாய்கிருஷ்ணா
ஏதுமனமிரக்க மில்லையோமாதவனே
இயங்காமற்றியங்காமல் வருவாயாதவனே(ஓடி)

ஆதியில்கொடுத்தநீ யந்தத்தில்காப்பாயே
நாதவேணுகோபாலா நாயேன்வினைதீர்ப்பாயே
நீதிவேதவல்லிக்குன் குதுகள்காட்டாமல்
நிச்சயமாய்த்தாராளையா சொன்னதைவாட்டாமல்(ஓடி.)

---

உக. இராகம்-சோகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

மோசஞ்செய்யப்போமோ-ஓராமா நீ
மோசஞ்செய்யப்போமோ

அநுபல்லவி.

நேசமானகல்விச்சாலைத் தர்மநிலைநாட்டி
பாசமானவென்செல்வ . னுக்குப்புகழ்பூட்டி (மோசஞ்)

சரணங்கள்.

கொடும்பாவியா ளுகையாலேமெத்த
கோபமோவுனக்கென்றன் மேலே-நான்
படுந்துக்கமினி யெவராலேதீர்க்கப்
படும்உனையல்லால் திருமாலே(மோச)

இந்நிலத்திலெனைக் கைவிடாதே-இனி
என்தனைவிட்டுப் போதலடாதேநீ
இன்னமென்னுடன் வாதாடாதே-ஹரியே
என்றனுக்கிழிவு நீதேடாதே(மோச)

பாரிலுனையேநம்பி னேனே-ஆசா
பாசமறச்செய்வாய் சீமானேஇப்போது
கோரிவந்துனைப் பணிந்தேனே-முதுக்
கோலவேதவல்லிதனை ஆள்வாயே(மோச.)

---

உஉ. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

ஓராமா இப்படிச்செய்யலாமா ஓராமா.

அநுபல்லவி.

ஸ்ரீராமாநம்பினபேனைக் கைவிட்டாய்
சீதாராமாஅநியாயஞ் செயநீயேற்பட்டாய்(ஓராமா)

சரணங்கள்.

க. நாட்டமாஞ்சூரிய குலத்திலவதாரம்-மிகு
தேட்டமாய்ச்செய் தருளியதேவீரம்
காட்டுப்புறாவுக்காக வெகுதூரம்-உன்
பாட்டன்கதைசென்ற தல்லோதுலாபாரம்(ஓரா)

ஒருபொய்சொல்லாம லூர்பதியிழந்திரவில்
ஓடிப்போய்ப்பெண்டு பிள்ளையைவிற்றுத்துறந்து
குருபுலையனுக்கடிமைப்பட்டு நடந்துகொண்ட
கோமான்குலம்விளக்கு கோவேசத்தியங்கடந்து(ஓரா)

௩, பொய்சொன்னால்உலகம் தரிக்குமோசாமி-நீ
புகழ்தர்மங்கொஞ்சமு மில்லையோநேமி
மெய்யாகவேஉன்னையே நம்பினேன்பூமியில்
வேறேகதியில்லை பதவல்லிக்குச்சாமி(ஓரா)

---

௨௩. இராகம்-நீலாம்புரி-தாளம்-ஆதி.

பல்லவி.

தாயேஜானகியம்மா என்தந்தைக்குச் சொல்லவொண்ணாதாவமமா.

அநுபல்லவி.

தாயேநீவஞ்சித்தால் தாணியில்கதியாரம்மா
தாயேகிருபைகூர்ந்து தந்தைக்குச்சொல்வாயம்மா(தாயே)

சரணங்கள்.

க. தந்தைநீதாயும்நீ சகலபாக்கியமும்நீயே
செந்திருவாந்தையல் மைந்தனைக்கொன்றுவிட்டாயே(தாயே)

௨, இருபதுவருஷமாய் உன்னையேநம்பினேனே
ஒருபலன்றியேமிகவும் வெம்பினேனே(தாயே)

௩. தந்தைதாய்போலிருந்தும் தாயில்லாப்பிள்ளைபோலே
தவிக்கவிட்டாயிது தர்மமோஆகையாலே(தாயே)

௪. மிதிலைக்கதிபதியாம் சனகன்மகளானாய்
கதியளித்திடுராமன் பதியாகமனையானாய்(தாயே)

௫. இன்னங்கதியாரம்மா எங்கேபோய்விழுவேனோ
இனியென்னசெய்குவேன் எவ்விடம்போய்த்தொழுவேனோ()

௬. ஐயையோஎன்தாயே அநியாயம்செய்தாயே
அடிமைவேதவல்லிகரு அருள்செய்யாதிருந்தாயே(தாயே)

கீர்த்தனைகள். ௰௯

௨௪. இராகம் [illegible] தாளம் [illegible]
[illegible] 20.
இன்னமும்இருக்கை[illegible] - என்னமாயம
இன்னமும்இரக்கமில்லையோ.

அநுபல்லவி.

அன்னைதந்தையென் அடிபணிந்தேன்மெய்யா
அபிபாயம்செய்யாமல் ஆதரிமலர்க்கையா (இன்ன)

சரணங்கள்.

௧. என்னகுற்றஞ்செய்தேனையா என்னைப்பெற்றதாதா
ஏழைசெய்பிழைபொறுக்கலாகாதா இனிபொறுக்கலாகாதா
பன்னளன்னைப்பெற்றுப் பாதனிக்கவிடுத்தாய்
பட்சமுடன்பார்த்தென்னைப் பாலியாமல்கெடுத்தாய் (இன்)

௨. ஆதிமூலமென்ற நாதங்கேட்டுவேகமாய்
ஆனைக்குமுன்சென்று காத்தாதரித்தாயே
பாதகியென்சப்தம் காதிலேறவில்லையோ
பண்பிதுதானோவையா நானென்செய்வேன் (இன்)

௩. காலமுள்ளதெல்லாம கழித்தேன்வீணிலே
கர்த்தனேநீயும்கை தொடாமல்விடுத்தாயே
ஓலமிட்டும்பினேன் வேறேகதியில்லையே
உவந்தென்னைக்காவாம லென்கைவிடுத்தாயே (இன்)

௪. இந்தஜென்மமெடுத்த சுகமபோதும்
இனிஜென்மம்வாராமல் வருவாயெப்போதும
கன்னலமுதேமிகு கருணையுடனேவந்து
கண்பார்த்தென்னைநீ காப்பாய்மனதுவந்து (இன்)

௫. மச்சகூர்மவராஹ நாரசிம்ஹரூபனே
மாபலிகோனையா சித்தபத்மநாபனே
மெச்சும்பரமபுரு ஷாபக்தவத்சலா
மேவும்பக்ஷிவாகனு பார்த்தனுக்கனுகூலா (இன்)

௬. பாரிலென்னைப்பரி காசஞ்செய்வார்கள்
பாவியென்றசபதம் படைத்தேனையாார்கள்
சிரியற்பாவனு பாபவிநாசனே
தெளிவாய்வேதவல்லியை யாருளவாய்விசுவாசனே (இன்)

உரு. இராகம்-தோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

என்னசெய்வேன் என்னசெய்குவேன் - பன்னகசயனு
என்னசெய்வேன் என்னசெய்குவேன்.

அநுபல்லவி.

இன்னமென்மீதில் இரக்கமில்லையோசற்றும்
அன்னைதந்தை குருதெய்வமும்நீயேமுற்றும் (என்ன)

சரணங்கள்.

க. வஞ்சனையொன்றும்நான் மனதிலறியேனே
கஞ்சனைச்சினந்துமுன் காலாலுதைத்தவனே (என்ன)

உ. பாவியென்றுசொல்லப் படைத்தாய்பூமியில்
கோவிமார்கண்களிக்கக் கூத்தாடினைகளவில் (என்ன)

ங. உன்னையேநம்பிநா னுழன்றுதிரிந்தேனே
என்னைக்காவாமையால் ஏங்கிக்கரைந்தேனே (என்ன)

ச. இன்னம்பூமியி லிருக்கலாகாதையா
என்றனக்கிரங்காம லேனின்னம்வாதையா (என்ன)

ரு. பாரினிலென்றனைநீ படைத்தபலன்போதும்
வேரிநறுந்துழாய் வேங்கடவரவெப்போதும் (என்ன)

சா. அவதிசென்மங்கொடுத தழுதுபுலம்பவிட்டாய்
கவலைதீர்த்தென்றும்வேத வல்லியைக்கிட்டாய் (என்ன.)

—:0:—

உசா. இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

திருச்சித்திரகூடத்தில் கண்டேன்கண்டேன்
திவ்யாநந்தத்தைக் கொண்டேன்கொண்டேன்.

அநுபல்லவி.

பெருவானவர்க்காக மாணிடவேடம்பூண்டு
குருவவதாரஞ்செய்த கோதண்டராமாஉன்னை (திருச)

சரணங்கள்.

க. பாலப்பிராயத்தில் மறையவன்பின்சென்று
பருத்தவில்லைவளைத்துச் சீதையைமணஞ்செய்து
கோலேந்துதசரதர் கண்டுமனமகிழ்ந்து
குதுகலமுடிசூட்டும கொள்கைமாறியஉன்னை (திருச)

௨. தாய்கொண்டவரத்தையே சத்தியமாகவெண்ணித்
தந்தையைமோசம்செய்து சடுதியில்புறப்பட்டுத்
தேவியுடன்நல்ல தம்பியும்தனுமாய்த்
திருவயோத்தியைவிட்டுத்தென்றிசைசென்றவுன்னை (திரு)

௩. குகனைச்சிநேகித்துக் கங்கைக்கரைதாண்டிச்
குளிர்சித்திரகூடங்கண்டு சிந்தைமகிழ்ந்திருக்கப்
புகல்தம்பிபரதன் புழுங்கிப்புலம்பவும்
புகழ்தாய்மார்வேண்டவும் பூமிவேண்டாதவுன்னை (திரு)

௪. வந்தபரதனுக்கு வஞ்சனைநீசெய்தாய்
வலியபக்ஷங்காட்டிப் பாதுகையுமீந்தாய்
சிந்தாகுலம்விண்ட பாதனுளங்குளிர்ந்து
சிரசில்தரிக்கக்கண்டு மிகமகிழ்ந்தவுன்னை (திரு)

௫. நந்திக்கிராமந்தன்னில் நல்லசிங்காசனத்தில்
நன்மகுடந்தரித்து வழிபார்த்திருந்தவரை
வந்துகாத்தாப்போலே வேதவல்லியைக்காத்து
வாதனைதீர்க்கும் தற்பராநாதாவுன்னை (திரு.)

——:0:——

௨௭. இராகம்-ஸ்ரீரஞ்சநி-அடதாளம்.

பல்லவி.

சீதாவுனக்குச்சித்தமிரங்கவில்லையோ ஓசீதா.

சரணங்கள்.

௧. ஆதரவாய்ப்பெற்று அவனிதனில்விட்ட
அம்மையற்றபெண்போல அவதிபடுகிறேனே (சீதா)

௨. பெண்படுந்துக்கத்தைப் பிரியத்துடன்வந்து
கண்பார்த்தாதரிப்பாய் கண்டுமிகவுகந்து (சீதா)

௩. என்னுலாகாதம்மா ஏழைவேதவல்லிக்கு
ஏற்றமதியுரைத்து என்னைக்காப்பாய்நீயும் (சீதா.)

——:0:——

௨௮. இராகம்-சாவேரி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

சூதுகள்செய்யாதே - ஓகிருஷ்ணா நீ
சூதுகள்செய்யாதே.

அநுபல்லவி.

சூதும்வாதுஞ்செய்தென்னைச் சோர்வுறவடியாதே
மாதசோதைசொற்காப்பாய் மதுசூதாபடியாதே (சூது)

சரணங்கள்.

க, பாலனுக்கோகுலத்தில் வெண்ணெய்திருடியுண்டே
பரிவுள்ளதாய்க்கு மிகவும்பயந்துகொண்டே
சாலவுரலோடு தாம்பினால்கட்டுண்டே
தாமோதரா நின்மேனி மத்தாலடியுண்டே (சூது)

உ, கோபியர்களைவெகு லீலைகள்செய்துகொண்டு
குன்றுகுடையாய்க்கொடுகோபாலரைக்காத்துப்பண்டு
பாவிபூதனையேவு நன்மாமனுயிருண்டு
பஞ்சவரைக்காத்துப் பாரதமுடிவுகண்டு (சூது)

ங, ஓபரமபுருஷா ஓபக்தவற்சலா
ஓபரமகாருணியா தீனதயாளா
மாபாபாகிதனே மார்க்கம்வேறில்லைதாளா
வோடிவிண்மண்ணளந்த வுலகநாதனேயாளா (சூது)

ச, கல்லோஉன்மனது கரையாதோகொஞ்சம்
காரணனேபரி பூரணனேயென்வஞ்சம்
அல்லலனுகாத அக்குசேலற்குக்கொஞ்சம்
அநுக்கிரகஞ்செய்தஉன் திருவடியேதஞ்சம் (சூது)

ரு. கரியின்முன்சென்றன்று காத்ததுபோலும்
அரியென்றபாலகனை யாதரித்தாப்போலும்
பரிசபரிக்குமுன் யளித்தாப்போலும்
சரிவேதவல்லிக் கிரங்கிரட்சிப்பாய்சாலும் (சூது)

---

உக. இராகம்-துசாவந்தி-தாளம்-ஆதி.

பல்லவி.

பாழ்மனதுக்கென்னசொல்லுவேன்-ஐயோராமா-என்
பாழ்மனதுக்கென்னசொல்லுவேன்.

அநுபல்லவி.

நில்லென்றால்நிற்கேனென்னுதே பாழானமனம்
நிலைகெட்டுத்திரிவேனென்னுதே ஐயோராமா (பாழ்)

சரணங்கள்.

க. பொய்யானவாழ்க்கையை மெய்யாகவேயெண்ணி
வையகத்தில் மயங்குதேஐயாராமா (பாழ்)

உ. வினவளிதன்னில்வேதனைப்பட்டுரோகாதேமயனாறு நம்
படுவேன்படுவே னென்னுதேஐயோராமா (பாழ்)

ங. எதிரில்லாப்பாவிகள் எளிதம்செய்வதை
என்மனஞ்சகியேனென்னுதே ஐயோராமா (பாழ்)

ச. தூஷிப்பவர்சகப் படட்டும்நம்தோஷங்க
ளறட்டுமென்றாலும் சோருதேஐயோராமா (பாழ்)

ரு. பாழானநெஞ்சேநீ பதறாதேயென்றாலும்
பதறித்துடிப்பே னென்னுதேஐயோராமா (பாழ்)

சா. மக்கள்போனவழியே உனக்குமென்றாலுமவ்
வழியில்நில்லேனென்னுதே ஐயோராமா (பாழ்)

எ. நீர்மேற்குமிழிபோல் நிலையில்காயமென்றாலும்
நிமிஷம்நில்லேனென்னுதே ஐயோராமா (பாழ்)

அ. கட்டிப்பிடித்துவேத வல்லிமனதையுன்றன்
கடிமலரடியில்வை கருணைக்கடலேயென் (பாழ்.)

———:0:———

நூ. இராகம்-அடாணு-ஆதிதாளம்.

பல்லவி.

வஞ்சனைசெய்யாதே - ஸ்ரீராமா நீ
வஞ்சனைசெய்யாதே.

அநுபல்லவி.

சஞ்சலம்நீக்கியாள் ஜானகிமணாளனே
தம்பிதுணையுள்ளோனே தசரததோனனே (வஞ்ச)

சரணங்கள்.

க. ஏற்றதம்பியும் நீயுமாய்
எதிரில்நின் றென்னையேமாற்றி
எப்படிமறைந்தாயோ என்மனம்சோருதையோ
என்றுதெளிவேனோ ஐயாரகுராமா (வஞ்)

உ. பதிதபாவகனே பாண்டவர்கள்தூதனே
கஜேந்திரனைக்காத்த கருடவாகனனே
கதியென்றதிரௌபதிக்குத் துகில்தந்துகாத்தோனே
மதிமிகுந்தபாலனைத் ததியில்ரட்சித்தோனே(வஞ்)

௩. மாயாவதாரா மண்ணளந்தபாதா
ஆயர்களைக்காக்கும் ஆதிலக்ஷ்மிநாதா
வார்குழலூதும் வத்தாகுமூர்த்தியே
மாலெனுந்திரு பன்னிருநாமனே(வஞ்)

௪. ஓடிவந்தென்னையாளுளாய் ஸ்ரீராமா
உள்ளதைத்தான்சொன்னே னுன்னைவிட்டுப்போமா
காடெரிப்போலமனம்நோவச்சொல்லுஞ்சொல்லியைக்
கடியவேகமாய்வந்து காவாய்வேதவல்லியை(வஞ்.)

———:o:———

௩௧. இராகம்-மத்தியமாவதி-சாப்பு-தாளம்.

பல்லவி.

வாவாஸ்ரீராமா என்முன்னுக வாவாஸ்ரீராமா.

அநுபல்லவி.

மாவாராகவா வந்தேன்வந்தேனென்று
மீதேறேணியை யேறவிட்டெடுத்தாயின்று(வாவா)

சரணங்கள்.

க. கனவிருதுகள்கட்டிக் கானகமெல்லாந்திரிந்து
அநகவிருடிகட் கனுக்கிரகித்தாப்போற்பரிந்து(வாவா)

உ. கருணுகடாக்ஷனே கருணைபாராயா
ஒருகவியாசனை யன்றுகாத்ததும்பொய்யா(வாவா)

௩. காக்கைப்போலவே கபடுகள்நீசெய்தாய்
போர்மிகுத்தவாலியைத் தூரநின்றெய்தாய்(வாவா)

௪. வேகமுடனேவந்து வேதவல்லியைக்காத்து
வினையாவுந்தீர்த்திடாய் மேவுஞ்சமயம்பார்த்து(வாவா)

———:o:———

௩௨. இராகம்-சங்காபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி.

என்தாயேமனமிரங்கவில்லையோஅம்மா
ஏனிப்படிசெய்வாயம்மா.

அன்பாய்ச்சனகனுகரு அருமைமகளான
தென்பாய்த்தசாத ராமனைமணந்தாயே(என்தா)

சரணங்கள்.

க. கல்லைப்பெண்ணாக்கிய கருணைகடாக்ஷனை
களிப்புடன்மாலையிட்ட காகுத்தன்மனைவியே(என்தா)

உ. ஆனையைக்காத்தருள் ஆபத்பாந்தவனை
ஆதரத்துடன்மணந்த ஆதிலக்ஷ்மிதேவியே(என்தா)

ந. காக்கைக்கோர்கண்கொடுத்த கபடநாடகன்தன்னைக்
களிப்புடன்சேர்ந்துவாழும் கமலவல்லித்தாயே(என்தா)

ச. அரவிந்தமாதாவே அன்பிற்குளமிணங்கி
அநுக்கிரகஞ்செய்வாய்தாயேவேதவல்லிக்கிப்போதே(என்.)

———:0:———

நந. இராகம்-தோடி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

இன்னம்என்மீதில்சாமி இரக்கமில்லையோ.

அநுபல்லவி.

என்னதான் செய்குவேன்
எனைப்பெற்ற அப்பனே (இன்னம்)

சரணங்கள்.

க. அரிநாராயணஸ்ரீ கோ
விந்த நாதனே
அருமையாம்பஞ்சபாண்டவர் தூதனே
ஆதிமூலமே மண்ணளந்தபாதனே(இன்ன)

உ. துட்டதாடகையைச் சாமி
சுருக்கில் எய்தாயே
துட்டராட்சதரை முற்றும்பொடித்தாயே
தூயமுனியாகம் சுகமாய்முடித்தாயே(இன்ன)

ந. ஆனையைக்காத்தவா ஸ்ரீ
ஆபத் பாந்தவா
பாவையம்போற்சொல்லும் பதுமையார்சோபனே
பாண்டரங்கற் கருணாபத்மநாபனே(இன்ன)

௪. தடாறுபர்த்தபாறை அன்று
சாபந் தீர்த்தாயே
விடவாவைந்தாவின் மீதுபடுத்தாயே
மேவுங்காக்கைக்கோர் கண்கொடுத்தாயே(இன்ன)

௫. பாலன்துதிசெய்ய திருக்கண்
பார்த்து ரட்சித்தாயே
ஆலமுகந்தவர்க் காத்தாதரித்தாயே
அண்ணனைவிட்ட விடணனைக்காத்தாயே(இன்ன)

௬. மாதுஸ்ரீதுரௌபதி தான்அன்று
மயங்கும் காலையில்
மாதவாரதியர் மெச்சிடத்தீர்த்தாயே
மானாத்துகில்தந்து மானத்தைக்காத்தாயே(இன்ன)

௭. காலனைஜயிக்க ஐயாஉன்
கையா லாகாதோ
காலமறிந்தருள் செய்யும்போடகனே
கபடுசெய்தாயே கபடநாடகனே(இன்ன)

௮. என்னவஞ்சமோ சாமியுமக்
கிதுவோர் வஞ்சமோ
இன்னவிதமென்று சொல்லவறியேனே
எவ்வண்ணம்நான் கடைத்தேறக்குறியேனே(இன்ன)

௯. இருவினைகள்வந்து ஐயாஎன்னை
என்றுந் தொடாமல்
இருவினையற்றுப் பவக்கடல்போக்க
எழிலார்திருவடி தந்தெனைக்காக்க(இன்ன)

௧0. கேளாய்சொல்லை ஏதென்று
இளைத்துவே னென்தொல்லை
தாளாதயர்வேற் கருள்கிருபாகரனே
தஞ்சமென்பாரைக் காக்குந்தயாபரனே(இன்ன)

௧௧. பட்சிவாகனனே என்னை
ரட்சியு மையனே
பட்சமுடனுவந் தென்றுங்காப்பாயே
பார்த்துவேதவல்லிக் கருள்வாய்நீயே(இன்ன.)

———:O:———

# கீர்த்தனைகள்.

## ௰௪. ஸ்ரீராகம்-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

௧. ஸ்ரீரகுராமா உன்திருவடிமலர்களைச்
சேருவதினிநா னெப்போ

௨. பாவியென்றனக்குப பாசவலையறுத்துன்
பாதந்தருவதினி யெப்போ

௩. என்னைப்போல்பாவிக ளுண்டோஇவ்வுலகத்தில்
என்னைக்காப்பதினி யெப்போ

௪. வஞ்சனைபண்ணியதுன் மனதேயறியுமே
வந்தென்னைக் காப்பதினியெப்போ

௫. இனிஎன்னாலாகாது சொன்னேன்
எதிரில்வந் தென்னைக்காப்பதெப்போ

௬. மாபாவிசடலத்தை மண்ணில்போட்டுனை
மலரடிகாணுவ தெப்போ

௭. பாழானவுலகத்தில் பட்டுநொந்தஎன்னைப்
பார்த்துக் கரையேற்றுவதெப்போ

௮. பாவிவேதவல்லியைப் பார்த்துமனமிரங்கிப்
பாதந்தருவதினி யெப்போ

—:o:—

## ௰௫. இராகம்-திபதை-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

௧. சரணம்சரணமையா சீதாபிராமா
சற்றுங்கிருபையில்லையோ சீதாபிராமா

௨. வஞ்சனைசெய்யாதே சீதாபிராமா
மனதைநீயறியாயோ சீதாபிராமா

௩. உன்னையேநம்பினேன் சீதாபிராமா
ஊழ்வினைதீர்க்காயோ சீதாபிராமா

௪. வஞ்சமோவொன்றறியேன் சீதாபிராமா
வந்தாதரிப்பாயே சீதாபிராமா

௫. வேகமுடன்வந்து சீதாபிராமா
வேதவல்லியைக்காப்பாய் சீதாபிராமா

௩௪. இராகம்-மோகனம்-ஆதி.

பல்லவி.

ஸ்ரீரகுராமாநீவந்திப்போதே சீக்கிரம்காப்பாயே.

சரணங்கள்.

க. கல்லைப்பெண்ணாக்கிய பாதா-என்றன்
கருத்தைநீயறியாயோ நாதா (ஸ்ரீரகு)

உ. ஆனையைக்காத்த வபிராமா-என்றன்
ஆபத்தைத்தாக்க வொண்ணாதா (ஸ்ரீரகு)

௩. மாதுஸ்ரீதுளொபதியைக் காத்த
மாயாளென்னுடனின்னம் வாதா (ஸ்ரீரகு)

௪. பாவிபடுந்துயரம்நீ பார்த்தால்
சகிப்பாயோஸ்ரீரகு நாதா (ஸ்ரீரகு)

௫. கொடும்பாவியானென்றுனக்கு என்மீதில்
கோபமோ சீதாபிராமா (ஸ்ரீரகு)

௬. வேறேகதியில்லைஸ்ரீராமா அருள்
வேதவல்லிக்குக்கௌசல்ய ராமா (ஸ்ரீரகு)

———:0:———

௩௭. இராகம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி.

என்றன்கவலைதீரையா ரங்கநாதா எழுந்திருந்தருட்கண்பாரையா.

அநுபல்லவி.

கந்தம்வீசுமலர்ப்பொழில் எங்கணும்மேவும்
காவேரிசூழ்பெருங் கோயிலாவென்றுகூவும் (என்)

சரணங்கள்.

க. கோசிகன்வேள்விகாத்தாய் அகலிகைசாபந்தீர்த்தாய்
மாசிலைவளைத்துமணஞ் சீதைக்கென்றுஆர்த்தாய்
தாசன்பரசுராமன் தன்னைச்சரல்சேர்த்தாய்
தாய்சொற்படிநீ அயோத்திவிட்டுபேர்த்தாய் (என்)

உ. வானவர்களைக்காக்கக் கானகஞ்செல்லவெண்ணி
ஜானகிதம்பியுடனே சாளமாகவேகண்ணி
ஆனநற்குகன்தோணியேறி கங்கையைத்தாண்டி
கானில்சித்திரகூடங் களிப்பாயமர்ந்தவனே (என்)

மகாமகோபாத்தியாய

௩. வந்தபரதனுக்குன் பாதுகையைத்தந்து
தந்திரமாய்வழிகாட்டித் தடையிற்கானம்புகுந்து
அந்தவிராதனைக்கொன் றருமுனிவர்க்கருளீய்ந்து
சந்தபஞ்சவடிகண்டு சாதமாய்மகிழ்ந்தவனே(என்)

௪. சூர்ப்பனகைமூக்கரிந்து கரதூஷணரைக்கொன்று
சூரமாரீசனைவென்று மைதிலியைப்பிரிந்து
சீர்கழுகாசனைக்கண்டு கவந்தனைவென்று
சேகரித்துக்கனிதந்த சபரியையுகந்தவனே(என்)

௫. பம்பாஸரோரத்தில் மாருதியைக்கண்டு
நம்பாவாலியைக்கொன்று நற்றம்பிக்குமுடிபண்டு
கம்பீரமாய்ச்சூட்டிக் கனவனுமானைக்கொண்டு
நம்புமடையாளம் ஜானகியிடங்கொண்டவனே(என்)

௬. கடலைக்கட்டிவளைத் திராவணனைக்கடுத்து
உடன்விடணற்கரசீய்ந்து வைதேகியைத்தடுத்து
திடந்தசாதன்வரம்பெற்றுத் தேவர்பயங்கெடுத்து
சுடர்புஷ்பகமேறிச் சேதுமகிமைசொன்னோய்(என்)

௭. அநுமானைமு[illegible]னனுப்பப் பரதருளங்குளிர்ந்து
அன்றயோத்தியையலங் கரிக்கவேவந்தமர்ந்து
முனிவசிஷ்டர்முதலானோர் முகூர்த்தங்கொண்டுநின்று
கனமகுடாபிஷேகஞ்செய்து களித்தராமச்சந்திரரோ(என்)

௮. பட்டாபிஷேகத்திற்கு வந்தபரிசனங்கட்
கிட்டமரியாதைசெய்தே விபீஷணற்கேங்கட
கிட்டர்செய்யுந் திருவாராதனத்தைத்தந்து
விட்டுத்தெற்குத்திசையே மிகவுமுவந்தவரோ(என்)

௯. காவேரிமத்தியில் விமானப்ரணவாகார
பூவேந்தனனந்தசயன மீதிலுன்ஆயாசந்தீர
கோமளநாச்சிமார் கூடியஅந்தரங்கக்
கோவேயருள்கொடுக்குங் கோனேஆனந்தரங்கா(என்)

௰. இன்னந்தெளியவில்லையோ உன்ஆயாசம்
என்னகூதானநித்திரையோ வனிந்தவியாசம்
மின்னும்பரமபத நாதாவேதவல்லி
என்னும்அடியாளை ஆள்வாய்கோதண்டவில்லி(என்.)

௬. உன்னையன்றிப் பேர்க்கு ஒருகுறைவாராது
வாழ்வினையன்றிவரும் ராமானனக்கு
வாழ்வினையன்வரும் ராமானனக்கு

௭. காட்டிமறைக்கின்றனன கண்ணனசெல்வனை
கடுகத்தரவேணும் ரகுராமனீயும்
கடுகத்தரவேணும் ரகுராமனீயும்

௮. உற்றதுசொன்னேனையா உற்றுக்கேட்டுநீயும்
ஓடிவந்துதருவாய் ரகுராமநீ
ஓடிவந்துதருவாய் ரகுராமா

௯. என்னகுற்றமென்மீதி லிங்கேயிருந்தாலும்
என்னைக்காப்பாய் ரகுராமநீ
என்னைக்காப்பாய் ரகுராமநீ

௧௦. பண்ணியபாவமெல்லாம் பற்றறுத்திட்டுநீயும்
வேதவல்லியைக்காவாய் ரகுராமநீ
வேதவல்லியைக்காவாய் ரகுராமநீ

——:0:——

௪௪. இராகம்-சாவேரி-அடதாளம்

பல்லவி.

அரியேநீகேளாய் - என்சொல்லை
அரியேநீகேளாய்.

அநுபல்லவி.

அரியேன்றனை ஆதரிக்காமல்விட்டாய்
அநியாயமாகவே அவதிபடுகிறேனே(அரியே)

சரணங்கள்.

௧. ஆதிமூலமென்ற கஜேந்திரன்முன்சென்று
அருந்துயரறுத்து ஆதரித்தாயே(அரியே)

௨. ஆழ்கடல்தன்னில்அமிழ்ந்த கப்பல்போல
அலைந்துதத்தளிக்கின்ற என்னைஆதரிப்பாய்(அரியே)

௩. தாமரையிலைமீதில் தண்ணீர்போலவேநான்
ததும்பித்தவிக்கின்றேனைத் தவியாதாதரிப்பாய்(அரியே)

௪. பூனைவாய்க்கிளிபோலப் புலம்பித்தவிக்கின்றேன்
பேர்தக்கண்பார்த்தென்னை ஆதரிப்பாய்இப்போ(அரியே)

ரு. கல்லோ உன்மனது [illegible]
கண்ணுமணிவண்ணு [illegible](அரியே)

சா. கருணையுடன்வேத வல்லியைக்கண்பார்த்துக்
கைகொடுத்தென்னை ஆதரிப்பாய்நீயே(அரியே)

——:0:——

சஉ. இராகம்-சௌராஷ்டகம்-தாளம்-திருபுடை.

பல்லவி.

ராகவனேசரணம்-என்னை-ரக்ஷிக்கஇது தருணம்.

அநுபல்லவி.

சங்குசக்ரத்தோளா சாலிகோத்ர
மகாரிஷிக்குப் பிரசன்னராகவா(ராகவ)

சரணங்கள்.

க. செந்தாமரைமலர்ப் பாதா-இந்தச்
செகத்தில்விளங்கும் பிரதாபா(ராகவ)

உ. செந்துளபமணிதோளா அன்னை
சீர்க்கனகவல்லி நாதா(ராகவ)

ங. விண்ணையளாவிய தாளா-சாவ
வேதாந்தவேத குணாளா(ராகவ)

ச. வெண்ணெயுண்டமணி வாயா-கான
மேவியபாண்டவர் நேயா(ராகவ)

ரு. தீராவினைகள் தீர்ப்போனே-இந்தத்
திருவெவ்வுளூர்மேவும் கோனே(ராகவ)

சா. ராகவனைஉன்சித்த மிரங்கிவந்து
ரக்ஷிவேதவல்லிக் கருள்தந்து(ராகவ)

——:0:——

சங. இராகம்-நாதநாமக்கிரிகை-தாளம்-ஆதி.

பல்லவி.

ஸ்ரீஹரியேயுன்றன்-துதியைநான் - சொல்லத்
துணிந்துவிட்டேன்சாமி.

அநுபல்லவி.

பக்தர்களைக்காக்கப் பரமபதத்தைவிட்டுப்
பாரிலவதாரஞ் செய்தோனே(ஸ்ரீஹரி)

## கீர்த்தனைகள்.

சரணங்கள்.

௧. சரணமடைந்தபேரைத் தவித்துப்புலம்பவிட்டுச்
சந்தோஷங்கொள்ளுகி றாயோ (ஸ்ரீஹரி)

௨. சற்றாகிலுங்கிருபை பக்தர்கள்மேல்வைத்துக்
தற்காத்துரக்ஷிப்ப துன்றன்கடனல்லவோ (ஸ்ரீஹரி)

௩. வஞ்சனைகளெண்ணி மாவலிபால்சென்று
மகியினில்மூவடி மண்ணிரந்தாயன்று (ஸ்ரீஹரி)

௪. தேவியைக்காணாமல் தேடித்தவிக்கும்போது
காலில்மறைந்துவாலி கனவுயிர்வாங்கினையே (ஸ்ரீஹரி)

௫. சங்கம்தொனிசெய்து சகலருமறியாமல்
அங்கபிமன்னனையன்று-நீ கொன்றாயே (ஸ்ரீஹரி)

௬. என்குடியைக்கெடுக்க ஏறெடுத்துப்பார்த்தாய்
என்னவர்மமோஉனக் கென்மீதிலேஅறியேன் (ஸ்ரீஹரி)

௭. அநியாயம்செய்துஎன் அருமைச்செல்வனைக்கொன்று
அவதிப்படவிட்டாயே ஆண்டவனேஎன்னை (ஸ்ரீஹரி)

௮. ஒன்றுமறியாநாயேன் புலம்புகின்றேன்உலைந்து
உறுவேதவல்வினை யுளங்கொண்டுகாப்பாயே (ஸ்ரீஹரி)

:0:

௪௪. இராகம்-பியாகு-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கிருஷ்ணகிருபையில்லையோ - நந்தகோபால
கிருஷ்ணகிருபையில்லையோ.

அநுபல்லவி.

அரும்பாடியில்வளர்ந்த ஸ்ரீகிருஷ்ண
அடிமையானபேரை அநியாயஞ்செய்யலாமா (கிருஷ்)

சரணங்கள்.

௧. சேஷசயனா ஸ்ரீபத்மநாபா
ஜெகமெல்லாம்பெற்ற ஸ்ரீபரந்தாமா (கிருஷ்)

௨. பதிதபாவனா பாபவிநாசனா
பக்தர்க்கனுகூலா பாண்டவர்கள்தூதா (கிருஷ்)

௩. முக்திமுதலிருந்து மூன்றுதலைமுறையாய்
மாமன்மாமியுமுன்னை வணங்கினதும்பொய்யா (இருவ்)

௪. கண்ணிலைவிடவேறு தெய்வமில்லையென்றென்
கணவனார்போதித்தா ரென்றனக்கேயன்று (இருவ்)

௫. உன்னையேதெய்வமென்று உண்மையாய்நம்பினேன்
சண்டாளதெய்வமே சதிசெய்வாயென்றறியேன் (இருவ்)

௬. நம்பிப்பணிந்தேனையா நலம்பெறலாமென்றென்
கண்ணானசெல்வத்தைக் கடிமோசம்செய்தாயே (இருவ்)

௭. ஏதுங்குறையில்லையென் றுள்ளமகிழ்ந்திருந்தேன்
இலவங்காத்தகிளிபோல் ஏங்கிப்புலம்பவிட்டாய் (இருவ்)

௮. இனியென்னசெய்குவேன் என்குடல்பற்றுதையோ
ஏழைவேதவல்லியை மனமிரங்கிக்காப்பாய் (இருவ்)

———:o:———

௪௫. இராகம்-சஹானா-தாளம்-ஆதி.

பல்லவி.

கனகவல்லித்தாயே-உன்றன்-கருணையிதுதானோ.

அநுபல்லவி.

சுக்கிரவாரத்திலே நீஎன்செல்வத்திற்குத்தந்த
சுதனையெங்கே ஒளித்தாயம்மா (கனக)

சரணங்கள்.

௧. தாயேஉன்மனம் தளரவில்லையோஇன்னம்
தரணியிலுனைவிட்டால் வேறேகதியாரம்மா (கனக)

௨. அன்பாய்என்தவத்திற்கு அநுக்கிரகஞ்செய்தாயே
என்றன்பாவமென்று எடுத்துக்கொண்டுபோனாயோ (கனக)

௩. உனக்குக்கிருபையிருந்தால் எனக்குக்குறைவருமோ
உன்கிருபையிதுதானோ என்னைச்சோதித்தாயோ (கனக)

௪. இனியாகிலுமிரங்கி என்னையனிடஞ்சொல்லி
எடுத்துப்போனமைந்தனை யேந்தித்தருவாயம்மா (கனக)

௫. பார்த்திருந்துமென்னைப் பரிகாசஞ்செய்யவிட்டாய்
பாவிவேதவல்லிகுறை தீரப்பாலனைத்தாராய் (கனக.)

௪௯. இராகம்-கல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

செங்கல்பட்டில்வாழும் - சிங்கப்பெருமாளேஉன்
திருவடிகளேசரணம்.

அநுபல்லவி.

இங்குப்பக்தனைக்காக்க எழிற்சிங்கரூபங்கொண்டு
இரணியனைக்கொன்று எழிற்பாலனைக்காத்த(செங்க)

சரணங்கள்.

௧. உன்றனைச்சேவிக்க வெகுநாளாயாவல்கொண்டு
சந்நிதிவரும்போது சஞ்சலமறுத்தேனென்றாய்
அந்தமொழிகேட்டு அங்கந்திடுக்கிட்டேன்
அநியாயஞ்செய்வாயென்று அறியாமற்போனேனே(செங்)

௨. ஒருமுதலின்கொடி யொடிப்படாவென்றேன்
என்னபாவஞ்செய்தேன் என்றன்கொடியறுக்கச்
சற்றுமிலுமிரக்க மில்லாமற்செய்தாயே
சிறுமங்கைக்காகிலும் இரங்காமற்போனாயே(செங்க)

௩. நீசெய்தவஞ்சனை நிமிஷமுமறக்கவில்லை
நினைக்கநினைக்கவும் என்குடல்பற்றுதையா
நின்கிருபையிதுவென்று அறியேனேதெளிசிங்கா
நிதமும்வேதவல்லியை மனமிரங்கிக்காப்பாய்(செங்க)

---

தங்கமெட்டு.

௫௰. இராகம் - காபி - தாளம் - ஆதி.

ராமா உன்னைநம்பினேன்
ராமா உன்னைநம்பினேன்
ராமா உன்னைநம்பினேன் - சீதா
ராமா உன்னைநம்பினேன்

௧. ராமாஎன்றனை நலமுடன்காப்பாயென்று
நயந்து பணிந்தேனையா-ஸ்ரீராமா-நான்
பொங்கிப் பணிந்தேனையா

௨. நானல்லோஉன்றன் திருவடிசேரவேணும்
அநியாயஞ்செய்ய லாமோ-ஸ்ரீராமா
அநியாயஞ்செய்ய லாமோ

௩. பாவிக்கபெக்காதென்று படருங்கொடியறுத்துப்
படுமோசஞ்செய்தா யல்லோ-ஸ்ரீராமா
படுமோசஞ்செய்தா யல்லோ

௪. அங்கந்துடிக்குதையா அடிமைவேதவல்லிக்கு
ஆறுவதெக் காலமோ-ஸ்ரீராமா
ஆறுவதெக் காலமோ

---

௪அ. இராகம்-மத்தியமாவதி-தாளம்-ஆதி.

பல்லவி.

ராகவனே சரணம் வீரராகவனே சரணம்.

அநுபல்லவி.

திருவெவ்வுளூர்தன்னில் வாழுங்கனகவலவிநாதா
ஒருவருமுன்னிணையாவரோ வுலகளந்தபாதா (ராகவே)

சரணங்கள்.

௧. சாலிகோத்ரமகா ரிஷிபத்தினியுடுத்திட்ட
பப்பளிச்சேலைதன்னைக் கைப்பற்றியகாருண்ணியா (ராகவ)

௨. பப்பளிச்சேலைதன்னைப் போர்த்துப்பள்ளிகொண்ட
பக்தபாரீனு ரிஷிகளைக்காக்கும்தந்திரா (ராகவ)

௩. திருவெவ்வுளூர்தன்னில் தீராவினைதீர்ப்போனே
தீர்த்தமகிமையால் வயித்தியனெனும்பேர்பெற்றோனே (ராக)

௪. உன்தீர்த்தக்கரைதன்னை விரும்பிநமஸ்கரித்தேன்
என்மங்கைவாழவேணுமென்றுபிரார்த்தித்திருந்தேன் (ராகவ)

௫. நான்பாவிஎன்றென் மங்கையைமறைத்தாயே
மறந்துவருங்காலத்தில் மைந்தனைஎடுத்தாயே (ராகவ)

௬. என்னபாவஞ்செய்தேன் என்னைத்துடிக்கவைத்தாய்
என்கண்ணனசெல்வனை என்றுநான்காண்பேனோ (ராகவ)

௭. என்றுதெளியுமையா என்குறைமீடேற
கர்மமிருத்தவேத வல்லிகஷ்டந்தீராய் (ராகவ)

—:o:—

௨௬. இராகம்-பியாகு-தாளம்-ஆதி.

பல்லவி.

ராமாஉன்னை நம்பினேன் - ரவிகுல
ராமாஉன்னை நம்பினேன்

அநுபல்லவி.

ஆமாஎன்வாயில் அடையமண்ணைறந்து
அபூர்வசெல்வத்தை அநுகட்டிப்பிடித்தாயே (ராமா)

சரணங்கள்.

௧. இடித்தமதி ளெழுப்பி
எத்திசையுந் தூணிறுத்திக்
குலைத்தஎன் குலமெல்லாம்
குடியேற்றவந்தா னென்றேன் (ராமா)

அருந்தவஞ் செய்துபெற்ற
அருமைச்செல்வனைக் கண்டு
பெருகமகிழ்ந்தே னையா
பெருமைப்படலா மென்று (ராமா)

௨. வாழும்பெருங்கால மாச்சு
வங்கிஷம் வளருமென்றேன்
வயிற்றைக்கொளுத்தி விட்டு
வகைமோசஞ் செய்தாயே (ராமா)

ஆசையெல்லாங் குலைத்து
அள்ளியிறைத்தே னென்றாய்
நான்செய்த தீவினையோ
நீசெய்த வஞ்சனையோ (ராமா)

௩. அரும்பாவி நானென்று
அநியாஞ்செய்து விட்டாய்
அகதிவேத வல்வினை
அவதிப்பட விட்டாய்(ராமா.)

---:o:---

௯௰. இராகம்-அடாணா-தாளம்-ஆதி.

பல்லவி.

ஸ்ரீஹரியேயுன்றன் சித்தமிரங்கவில்லையோ-இன்னம்.

சரணங்கள்.

௧. நீர் இரங்காவிட்டால் யாரிரங்குவாரையா
உள்ளதுசொன்னேனையா ஓபரந்தாமா(ஸ்ரீஹரி)

௨. பரமபுருஷா ஸ்ரீபரந்தாமாஓபக்தவத்சலா
பார்க்குள்ளேயென்றனைப் பார்த்துவஞ்சித்தாயே(ஸ்ரீஹரி)

௩. வஞ்சனைசெய்யாதே வார்த்தைபுரட்டாதேஇப்போது
வந்துவேதவல்லியை மனமிரங்கிக்காப்பாயே(ஸ்ரீஹரி)

———:0:———

௯௧. இராகம்-தர்பார்-தாளம்-ஆதி.

பல்லவி.

நன்றாய்ச்செய்தாய்ராமா - அநியாயம்நீ
நன்றாய்ச்செய்தாய்ராமா.

அநுபல்லவி.

என்றுநினைந்திங்கு இழைத்ததுண்டாயையா(நன்றா)

சரணங்கள்.

௧. வெள்ளைக்குதிரைமேலே வேடிக்கையாகவேறி
வெயிலைப்பாராமல்வந்தாய் ஓசீதாராமாநீ(நன்றா)

௨. பாலன்வளருமட்டும் பதினைந்துவருஷமாய்ப்
பார்த்துக்காத்திருந்த ஓசீதாராமாநீ(நன்றா)

௩. பத்தில்லைஎட்டில்லை பாலைக்கொடிஒன்று
படுமோசஞ்செய்வாயென்று நானறியேனோராமாநீ(நன்றா)

௪. பணத்தையபகரிக்கும் பாவிகள்எண்ணப்படி
பாவிவேதவல்லியைப் படுமோசஞ்செய்தாயே(நன்றா

———:0:———

௯௨. இராகம்-கேதாரகௌளம்-சாப்பு-தாளம்.

பல்லவி.

ஏன்வந்தாய்-சீதா - ராமா
என்னைவஞ்சிக்கவோதான்வந்தாய் ராமா.

## இரட்டைக்கண்ணிகள்.

க. வந்தாய்வந்தாயென்று ஸ்ரீராமா-நான்
மனமகிழ்ந்தேனையா அபிராமா

உ. உனைநம்பினேனையா ஸ்ரீராமா-நான்
உன்னைச்சரணடைந்தேன் அபிராமா

௩. வஞ்சனைசெய்யாயென்று ஸ்ரீராமா-நான்
மனமகிழ்ந்திருந்தேனே அபிராமா

௪. காக்கிறுப்போலவே ஸ்ரீராமா-என்னைக்
கஷ்டப்படுத்திவிட்டாய் அபிராமா

௫. பாலன்வளருமட்டும் ஸ்ரீராமா-என்னைப்
பார்த்துச்சதிசெய்தாயே அபிராமா

௬. அநியாயஞ்செய்தாயே ஸ்ரீராமா-நான்
அதைஅறியாமல்போனேனே அபிராமா

௭. தந்தையைச்சதிசெய்தாய் ஸ்ரீராமா-என்றன்
தனயனைச்சதிசெய்தாய் அபிராமா

௮. என்னங்கந்துடிக்குதே ஸ்ரீராமா-உனக்
கென்துயரென்சொல்வேன் அபிராமா

௯. ஆகாதார்முன்பாக ஸ்ரீராமா-என்னை
அவதிப்படவிட்டாயோ அபிராமா

௰. வலதுபழிப்பார்முன் ஸ்ரீராமா-என்
வயிற்றைக்கொளுத்திவிட்டாய் அபிராமா

௰க. தளர்ந்திட்டகாலத்தில் ஸ்ரீராமா-என்னைத்
தவித்துப்புலம்பவிட்டாய் அபிராமா

௰உ. அநியாயம்நீசெய்தாய் ஸ்ரீராமா-அதை
ஆருடனேசொல்வேன் அபிராமா

௰௩. பக்தவத்சலனென்ற ஸ்ரீராமா-ஓ
பக்தபராதீனா அபிராமா

௰௪. பாவிவேதவல்லியை ஸ்ரீராமா-என்றும்
பார்ப்பார்பழிக்கவைத்தாய் அபிராமா

## ௫௧. இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஆதி.

### பல்லவி.

ராகவாஎழுந்திராய் - ராகவாஎழுந்திராய்
ராகவாஎழுந்திருந்தெதிராகவா கண்பாரையா.

### அநுபல்லவி.

அன்பாயடைந்தபேரை அவதிப்படவிட்டாயே
தென்பாய்ப்பள்ளிகொண்டு திருட்டுநித்திரைசெய்யும்(ராக)

### சரணங்கள்.

க. உன்னைநம்பினது உண்மையென்றறியாயோ
நான்மாத்திரமல்ல உன்னைநம்பினதையா
தநயனைப்பெற்றவர்கள் தாமுடன்நம்பினூர்கள்
பர்த்தாவைப்பெற்றவரும் பக்தியுடன்பணிந்தார்(ராக)

உ. உன்தூக்கமயக்கத்தால் கொடுத்தவரமெல்லாம்
கெட்டழிந்துபோகுதையா பரந்தாமா
மூன்றுதலைமுறையாய் முதற்பேறுனதல்லவோ
முழுதும்மறந்துநீயும் முழுமோசஞ்செய்தாயே(ராக)

௩. கலியுகஅநியாயங் கண்டாற்சகிப்பாயோ
கண்திறந்துஇனிப் பாராயாகர்த்தனே
பக்தர்களைக்காக்கும் பரமதயாளா
பத்தவதாரா பன்னிருநாமா(ராக)

௪. மக்களெல்லாம்தோற்று மறந்துதெளிந்துநின்றேன்
மதிமோசஞ்செய்து விட்டாயேஅப்பா
ஆர்செய்தபாவமோ நான்செய்தகர்மமோ
என்னையலையவைத்தா யேழைபங்காளா(ராக)

௫. என்னையடுத்தமக்கள் ஏங்கிப்புலம்புகின்றார்
என்னசெய்வேனையா என்வயிறுபற்றுது
என்தாய்கனகவல்லி எழுப்பநடுங்குகின்றாள்
எழுந்திருந்துபார்த்து என்றன்கவலைதீராய்(ராக)

௬. தூக்கமுந்தெரிய வில்லையோஇன்னம்
உன்தன்சூதுகளை யாரறிவாரையா
தந்தவரமெல்லாம் வேதவல்லிக்குஇப்போ
சதிமோசஞ்செய்யாமல் சந்நிதியில்வந்துதாராய்(ராக)

சு. அண்டமும்பிண்டமும் அளந்தஸ்ரீபாதந்தன்னை
கண்டென்றுகளிப்பேனோ கலியையான்தீர்வேனோ (ஓம்ஸ்ரீ)

எ. அகதிவேதவல்லிக்கு அனுக்கிரகம்நீசெய்து
யளந்தபாதத்தால் அரும்பாவம்தனைக்கொய்து (ஓம்ஸ்ரீ.)

———:0:———

## ருஅ. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

அப்பனேஸ்ரீராமா அன்புடன்சென்று
ஆதரிப்பாய் நீ ராமா.

சரணங்கள்.

க. கமலக்கண்திறந்து கருணையுடன்பார்த்து
கஷ்டந்தனைத்தீர்த்துக் காத்தாதரிப்பாயே (அப்ப)

உ. கல்லைப்பெண்ணாக்கிய கருணைகடாக்ஷனே
கவலைகளைத்தீர்த்துக் காப்பதாரையாளன் (அப்ப)

ங. பாஞ்சாலன்பெற்றெடுத்த பத்தினிமுன்சென்று
பாவிகளைவிலக்கி மானத்தைக்காப்பாயே (அப்ப)

ச. ஆனைக்குமுன்சென்று ஆபத்தைத்தீர்த்தாற்போல்
அறியாதவனருகில் சென்றாதரிப்பாயே (அப்ப)

ரு. மாதவாநீயும் மைந்தன்மனதிற்சென்று
மனங்கலங்காமலே மைந்தனைக்காப்பாயே (அப்ப)

சு. திசைதநீபாராய் திக்குவேறில்லையையா
உன்னைவிட்டாலெனக்கு வேறேகெதியாரையா (அப்ப)

எ. சேஷசயனு ஸ்ரீபத்மநாபாநீயும்
செல்வன்முன்னாகச் செயங்கொண்டுவருவாய்நீ (அப்ப)

அ. ஓ ஆபத்பாந்தவா அடியாள்வேதவல்லி
ஆபத்தைநீகாத்து ஆதரிப்பாயிப்போதே (அப்ப.)

———:0:———

## ருசு. இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

ஓடிவாராமா நீ யிப்போதே ஓடிவாராமா.

அநுபல்லவி.

துஷ்டர்களைவிலக்கி இஷ்டர்களைரக்ஷிக்க
எழுந்தோடிவாராமா நீ இப்போதே(ஓடிவா)

சரணங்கள்.

க. வஞ்சனைசெய்யாதே வந்தாதரிப்பாயே
கொஞ்சமுங்கூடச்சகிக்க என்னாலாகாதே(ஓடிவா)

௨. அய்யனேராமா உனக்கு ஆலசியம்ஏன்சும்மா
தசரதபாலாஎனக்குத் திக்குவேறில்லையா(ஓடிவா)

௩. கல்லைப்பெண்ணாக்கிய கருணைகடாக்ஷனே
கையாலாகாதுபோலக் காலம்போக்கிவிடாதே(ஓடிவா)

௪. உன்றன்திருவடியை உறுதியாய்நம்பினேன்
முழுமோசஞ்செய்யாமல் முன்னின்றுகாப்பாய்நீ(ஓடிவா)

௫. மாருதியுடனே மாதவாநீயும்
மனோவேகமாய்ச்சென்று மனக்குறைநீக்குவாய்(ஓடிவா)

௬. அடியாளைக்காத்து அனுக்கிரகஞ்செய்ய
அரக்கனைஅரித்துநீ அன்புடன்வருவாயே(ஓடிவா)

௭. என்றன்சஞ்சலந் தீர்த்துமைந்தனைக்காத்து
வேதவல்லிமனதைக் களிக்கும்படிசெய்யாய்(ஓடிவா.)

——:o:——

௬௰. இராகம்-துசாவந்தி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஓராமா உனக்கிந்தனை ஆலசியமாமா - என்சாமி.

அநுபல்லவி.

உன்னைநம்பினபேனை நீ காவாமல்விட்டால்
உன்னையான்விடுவேனோ சீதாராமா(ஓராமா)

சரணங்கள்.

க. தம்பியுந்தானுமாய்த் தற்காத்ததுபோல
தருணத்தில்காப்பாயே சீதாராமா(ஓராமா)

௨. கிள்ளிக்கிள்ளியெறியக் கிளைத்துமுளைப்பதுபோல்
கிளைக்குங்கெடுதியை விலக்காய்சீதாராமா(ஓராமா)

௩. சமயமதையறிந்து சஞ்சலத்தைநீக்கி
மைந்தனைக்காக்க வருவாய்சீராமா(ஓராமா)

௪. இந்தச்சமயத்தில் அதிவேகமாய்வந்து
வேதனைகளைத்தீர்த்து வேதவல்லியைக்காப்பாய்(ஓராமா.)

---:o:---

௬௧. இராகம்-கல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

தாயேஜானகி யம்மா -- நீயும்
தயவுடன் ஆதரிப்பாய் அம்மா.

அநுபல்லவி.

தந்தைதாய்நீயென்று ஸ்திரமாய்நம்பினேனே
நீயுரைத்தமொழியை மறவாமல்பாருமம்மா(தாயே)

சரணங்கள்.

௧. என்மீதில்கிருபைசெய் திரங்கினதுமெய்யானால்
என்கவலையைத்தீர்த்து எனையாதரிப்பாயம்மா(தாயே)

௨. பக்தவத்சலனுக்குப் பரிவுடனுரைத்தாயே
கர்த்தன்மனமிரங்கக் கஷ்டங்கள்தீர்த்தாயே(தாயே)

௩. உன்னைவிட்டாலெனக்கு வேறேகதியாரம்மா
உன்னைநம்பியடைந்தேன் ஊழ்வினைதீராயம்மா(தாயே)

௪. பாசமுடன்வந்திப்போ பாரக்கவலைதீர்த்துப்
பார்த்துவேதவல்லியைப் பரிவுடன்காப்பாயம்மா(தாயே.)

---:o:---

௬௨. இராகம்-முகாரி-தாளம்-ஆதி.

பல்லவி.

கலங்காதிருநெஞ்சே - நீ ஒன்றுக்கும்
கலங்காதிருநெஞ்சே.

அநுபல்லவி.

கலங்காதிருநம் கர்த்தன்ஸ்ரீராமன்
கருத்துடன்காக்கின்றான் கவலையென்படுகிறாய் (கலங்கா)

சரணங்கள்.

௧. தம்பியுந்தானுமாய்த் தேவியுடன்வந்து
தேவியைவிட்டிங்கே ஜனுதியில்போய்க்காத்தான் (கலங்)

௨. ஐயன்ஸ்ரீராமன் அனுக்கிரகமிருக்கையில்
ஆரென்னசெய்யலா மலையாதேநெஞ்சே (கலங்)

௩. இன்னங்குறையில்லை எதிராகஇருக்கின்றான்
மைந்தனைக்காத்து மனங்களிக்கச்செய்வான் (கலங்)

௪. பக்தவத்சலன் பாங்குடனெதிர்சென்று
பார்த்துவேதவல்லியைக் காத்தோயாதாதரிப்பான் (கலங்.)

——:0:——

௬௩. இராகம்-கன்னடம்-தாளம்-ஆதி.

பல்லவி.

அஞ்சவேண்டாமனதே - இனி நீ
அஞ்சவேண்டாமனதே.

அநுபல்லவி.

அஞ்சாமலிருமன ஐயன்ஸ்ரீராமன்
அருகிலிருந்து ஆதரிக்கின்றான் (அஞ்ச)

சரணங்கள்.

௧. ராமனைவிடவேறு தெய்வமில்லையென்று
நம்பிநீஸ்திரமாய் நாடியிருப்பாயென்றும்(அஞ்ச)

௨. ஆனையைக்காத்த ஆபத்பாந்தவன்
அனுக்கிரகஞ்செய்ய அம்மனுடன்வந்தான்(அஞ்ச)

௩. துஷ்டர்களையெல்லாம் சுருக்காகவேயடக்கி
சுகந்தருவேனென்று துரிதமாயிருக்கின்றான்(அஞ்ச)

௪. பஞ்சைகளாடிய வஞ்சகவார்த்தையைப்
பஞ்சுபோலூதியென் மஞ்சன்தனைக்காப்பான்(அஞ்ச)

௫. மெத்தவும்நொந்து வெதும்பியிருக்கும்நம்மைப்
பத்திரமாய்ச்சென்று பாதுகாத்திருக்கின்றான்(அஞ்ச)

௬. பத்தவதாரன் பத்தினியுடன்வந்து
பாரக்கவலைதீர்த்து வேதவல்லியைக்காப்பான்(அஞ்ச.)

௬௪. இராகம்-சஹானா-தாளம்-ஆதி.

பல்லவி.

பஜனைசெய்மனதே நீ அலையாமல்ஸ்ரீராமன்
பஜனைசெய்மனதே.

அநுபல்லவி.

பஜனைசெய்தானுன்றன் பாவந்தனையறுத்துப்
பாரக்கவலைதீர்த்துப் பாலிப்பானுன்னை(பஜனை)

சரணங்கள்.

௧. எத்தனைதரம்நான் எடுத்துரைத்தாலும்
ஏழைமனதேநீ ஏங்கித்திரிகிறாய்(பஜனை)

௨. ராமனைநம்பிநீ நலமுடன்சிந்தித்தால்
நமக்குக்குறைவருமோ நம்புவாய்என்சொல்லை(பஜனை)

௩. ராமலட்சுமணர் நலமுடன்பின்சென்று
நன்மைதருவேனென்று மைந்தன்முன்நிற்கின்றார்(பஜனை)

௪. ராமலட்சுமணர் நல்லதுணையிருக்க
கவலைகொண்டுநீ கலங்குவதேன்சும்மா(பஜனை)

---

௬௫. இராகம்-சாவேரி-தாளம்-திருபுடை.

பல்லவி.

ஐயனே சீதாபிராமா
உனக்கித்தனை ஆலசியமேன்சும்மா ஆமா.

அநுபல்லவி.

ஸ்ரீஹரியேபரந்தாமா கோதண்டராமா
நீயிரங்காமலிருப்பதும் தர்மமாமா (ஐயனே)

சரணங்கள்.

௧. நான்நம்பினதுனை யறியமாட்டாயோ
நான்படுந்துயர் நீயறியாயோ
மெய்யாகவேநீதா னென்னையிந்நாளினில்
வேடிக்கைபார்க்கவும் நிற்கின்றாயோ(ஐயனே)

௨. வந்தேன்வந்தேனென்று சொல்லியோகுராமா
வகைமோசஞ்செய்தென்னை மயங்கவிடுத்தாயே
இந்தத்துயரமென்றாற் சகிக்கமுடியாதுசற்றும
இன்னமென்றன்மீதிலேனவஞ்சமறியேன்முராறும (ஐய)

௩. போதும்போதும் ஸ்ரீராமாநீசெய்தவஞ்சம்
பொறுக்கவுமுடியா தெவராலுமேநீயேதஞ்சம்
ஆதியிலிப்படிப்பட்ட குணத்தனென்றேயறியேன்
ஆறுதலுமுன்றனைவிட்டு எங்கனோநானுழிவேன் (ஐயனே)

௪. மக்களையேவனவாசம் போலவேநீமறு
தேசத்தில்விட்டமயங்கித் தவிக்கின்றேன்பொறு
பக்தபராதீன ஸ்ரீராமாநீயின்று
பாழுங்கவலையைத் தீராயோநலமென்று (ஐயனே)

௫. கர்த்தனேமாராபி ராமாகோசலையே
கலங்குதேயென்னெஞ்சம் கடுகிநீவாராயே
மத்தகரியினைக் காத்தவனேயென்று
வாழ்த்தவரந்தரு வாயேல்மிகநன்று (ஐயனே)

௬. வஞ்சகப்பாவிக ளென்னைராமா
வலதுகள்பேசவது வயிறுபொறுக்கவில்லை
உன்கிருபையிருக்கையி லெனக்கு
ஏதுங்குறையில்லை என்றிருந்தேனே (ஐயனே)

௭. தள்ளாதநாளையில் ராமா
சஞ்சலப்படுவதுனக்கு தர்மமாமா
செய்யாதஇம்சைகள் செய்தாயினி
சித்தமிரங்கியே யிரக்ஷிப்பாயெனை (ஐயனே)

௮. அரவின்மேனடித்த அம்புயப்பொற்பாதா
அடியாள்துயர்தீர்க்க உன்னாலாகாதா
பரமபுருஷனே பட்சிவாகனனே
பாவிபடுந்துயர்நீ பார்த்தருள்வாயனே (ஐயனே)

௯. ஒல்லைவந்துகாப்பாயே யின்றென்றனை
உள்ளதுசொன்னே னையாவேயொருதனி
கல்லோஉன்னெஞ்சம் கலங்காதோகொஞ்சம்
கனிவாய்ஓடிவந்து காப்பாய்நீதஞ்சம் (ஐயனே)

௰. சதிகாரப்பாவிகள் முன்னேநீநன்று
தம்பியுநீயுமாய் சடுதியிற்சென்று
மதலைதனைக்கொண் டிங்கேயேவந்து
மகிழ்வாகச்சேர்ப்பாய் பக்தவத்சலனேமுந்து (ஐயனே)

இன்னமும்மென்னுடன் வாதாசகுவீர
என்னுலாகாதையா உன்கூதோர
உன்னையன்றிவேறே கெதியில்லையேமெய்யாய்
ஒருவேதவல்லிக்குறை தீர்க்காயோவாராய்(ஐயனே.)

——:0:——

சுசு. இராகம்-பியாகு-தாளம்-ஆதி.

பல்லவி.

ராமாஎன்கவலைதீராயோ - ஓ ஓ பரந்தாமா
எதிரில்வந்துபாராயோ.

அநுபல்லவி.

நீவந்துபாராவிட்டால் வேறேகதியார்மெய்யா
மாருதிமேலேறி மனோவேகமாய்வாராய் (ராமா)

சரணங்கள்.

க. ஆதிமூலமென்று அன்றுகரிகூவ
அதிவேகமாய்வந்து அதனைக்காத்தாப்போல (ராமா)

உ. பாலன்படுந்துயரம் பார்த்துமனமிரங்கி
பரிவுடனோடிவந்து பாலனைக்காத்தாப்போல (ராமா)

ந. கற்புடையபாஞ்சாலி கலங்கிநினைக்கும்போது
கடுகியேஓடிவந்து காத்தளித்ததுபோல (ராமா)

ச. கடையேன்முறையிடவுன் காதிலேறாதிப்போ
கருணைகடாக்ஷனே கடுகிவருவாயிப்போ (ராமா)

ரு. தீராக்கவலையிற் சிக்கித்திரிந்தேனின்று
தெய்வமேதெய்வமே யென்றேன்கெதியின்று (ராமா)

சா. வேதமுதலியகலை யறியாப்பாஞ்சுடரோ
வேதவல்லியைக்காக்க வருவாய்பொருந்திடரோ (ராமா.)

——:0:——

சுஎ. இராகம்-சௌராஷ்டகம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

வில்லாளிராகவாநீ யிப்போது
வேகமாய்வந்தா தரிபயாய்தப்பாது.

௧. வேறேகெதியில்லை யையாஇனிமூர்த்தேன்
வேதனைகளைத்தீர்ப்பாய் மெய்யாகன்றேன்(வில்லா)

௨. வேடர்தொடுக்கின்ற கொடியதொருவில்லை
வேடிக்கைக்கோகொண்டாய் நீவெகுதொல்லை(வில்லா)

௩. துஷ்டத்தனஞ்செய்யுந் தாடகையைக்கொன்று
சுவாகுவையோரம்பா லெய்தாயேநீயன்று(வில்லா)

௪. வரும்வழியி லெதிர்த்துவந்துநின்ற
பரசுராமன் கெர்வந்தனைவென்ற(வில்லா)

௫. காதூஷணுதியரை யன்று
கணத்திலேபொடிசெய்தாய் நீசென்று(வில்லா)

௬. மாயமான்பின்சென்று கொய்தாய்
மாரீசனையோரம்பா லெய்தாய்(வில்லா)

௭. மறைந்துமராமர மெய்தாய்-நீயந்த
வலியுள்ளவாலி வதைசெய்தாய்(வில்லா)

௮. முன்னுகவந்தென் எதிர்நின்றாய்
மூலபலத்தினை வேருடன்வென்றாய்(வில்லா)

௯. கொடியராவணன்முத லோரைக்கொன்றாய்
குற்றமில்லாவந்தண ரைக்காத்தாய்(வில்லா)

௰. உன்மைந்தனருகினிற் செல்லாய்
உள்ளக்கவலைகளைத் தீராய்(வில்லா)

௰௧. பக்தபராதீன ஸ்ரீராமா
பார்க்குள்கெதியில்லை பொய்யாமா(வில்லா)

௰௨. வேதியர்தங்கள் கவலைதீர்ப்பாய்
வேதவல்லியை நீகாப்பாய்(வில்லா.)

௬௮. இராகம்-கல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

அப்பக்குடத்தானே அடிபணிந்தேனுன்னை
அப்பாமனமிரங்காய்.

சரணங்கள்.

க. அப்பக்குடத்தையுன் பக்கத்திலேயிட்டு
அயர்ந்துபள்ளிகொண்டா யடியவர்க்கீர்விட்டு (அப்ப)

உ. அயோத்திதனைவிட்டு அனேகஸ்தலந்தோறும்
அமர்ந்துசேவைதந்து அடியவனைக்காலும் (அப்ப)

ங. நின்றான்இருந்தான் கிடந்தாலும்நீயன்றோ
நின்னையடைந்தபேனைக் காக்கும்பிரான்றோ (அப்ப)

ச. காவேரிமத்தியில் கண்வளர்ந்தஸ்ரீஹரி
கமலவல்லிநாதா கருணைவைப்பதுசரி (அப்ப)

ரு. வஞ்சனைகள்செய்தென்னை சஞ்சலத்தில்விட்டாய்
கொஞ்சமனமிரங்கிக் குளிரக்கண்பார்கட்டாய் (அப்ப)

சா. மெத்தவும்நொந்து வெதும்புவதுமறிவாய்
வேதவல்லிகவலை வேகமுடன்கொய்வாய்(அப்ப.)

:0:

சாகூ. இராகம்-காபி-தாளம்-ஆதி.

பல்லவி.

இன்னம்வரக்காணகிலே னென்னமாயம் - ராமா
இன்னம்வரக்காணகிலே னென்னமாயம்.

சரணங்கள்.

க. சொன்னசொல்மாற்றாதே சூதாகமாட்டாதே
வையகந்தன்னில் மயங்கவிடாதே(இன்ன)

உ. ஒன்றுங்குறையில்லை என்றுரைத்தாயே
உறுதியாய்நம்பினேன் சதியொன்றுஞ்செய்யாதே(இன்ன)

ங. நம்பினேனுன்னை நாளேறிப்போகுது
வரஇன்னங்காணகிலேன் வார்த்தைபுறட்டாதே(இன்ன)

ச. தாய்சொன்னவார்த்தையை சதமாகவேநம்பி
தவிக்கின்றஎன்னையே தற்காத்தருளுவாய்(இன்ன)

ரு. பார்தன்னிலுன்னையே பக்தியுடன்பணிந்து
பாதவிக்கின்றேனே பக்ஷமுடனருள்வாய்(இன்ன)

சா. வேறேகதியில்லை வேதவல்லிக்குச்சுவாமி
வேகமுடன்வந்து வேண்டும்வரமருள்வாய்(இன்ன.)

:0:

௭௰. இராகம்-அசாவேரி-தாளம்-ஆதி.

பல்லவி.

ராமாஎன்முன்னை வோடிவருவாய்
பார்த்தாமா நீயிப்போது.

அநுபல்லவி.

வருவதுனக்குமிக வரிதோமாதவா
சொல்லுகிறேன் கேளையா (ராமா)

சரணங்கள்.

௧. கருணாகரனே பக்தபராதீனனென்று
பிரியமுடனழைத்த பாலனைக்காத்ததும்பொய்யோ (ராமா)

௨. நாரணனேபரிபூரணனே மராமராவென்ற
வேடனைமகாமுனியாய்ச் செய்ததும்பொய்தானோ (ராமா)

௩. ஆதிமூலமென்ற நாதந்தனைக்கேட்டு
ஆனையைக்காத்ததும் அன்றுநீபொய்தானோ (ராமா)

௪. பாஞ்சாலிமுறையிடப் பார்த்துமாளாத்துகிலை
பார்த்திபர்சபையினி லளித்ததும்பொய்தானோ (ராமா)

௫. அனலில்விழுந்தவிட்டிற்பறவைபோற்றுடிக்கின்றேன்
அண்டிவந்துகாப்பாயே பாவிபடுந்துயரம் (ராமா)

௬. என்றன்முறைஉன்றன் . காதிலேறவில்லையோ
இறைவனேகருணையாய் இனிககடுகிவாராயோ (ராமா)

௭. ரவிகுலந்தன்னி லுதித்தாயேரகுராமா
ராவணாந்தககான் றுயரமடையலாமா (ராமா)

௮. இன்னமென்மனதைநீ சோதிக்கின்றாயே
என்னசோதித்தாலு முன்னைவிடுவேனோபாராயே (ராமா)

௯. ஏதுமறிகிலேன் சடுதியிலேவருவாய்
வேதவல்லியைக்காத்து வேண்டும்வரந்தருவாய் (ராமா.)

——:0:——

௭௧. இராகம்-காம்போதி-தாளம்-ஏகம்.

பல்லவி.

ராமாஉன்னைத்தேடித்தேடி கண்கள்வாடுதே
காரணனேஉன்நாமஞ் சொல்லச்சொல்லமனமுமுருகுதே.

சரணங்கள்.

க. பச்சைமேனியும்பவளவாயும் குளிர்ந்தபார்வையும்
பாரெல்லாமளந்த பாதமும்பார்க்கவேண்டுவேன் (ராமா)

உ. ஆழியுஞ்சங்கமும் அம்பும்வில்லுமணிந்ததோளனே
ஆராலும்என்றும்வெல்லக் கூடாதஅமரர்தேவனே (ராமா)

ந. அநந்தசயனஆதிமூலமே அஷ்டலட்சுமிநாதா
அன்பாய்துதித்தபேர்களைக் காக்குமெங்கள்தயாபரனே(ரா)

ச. ஆதிமூலமென்றுகரிகூவ அன்புடனோடிவந்து
ஆனையைக்காத்துஆதரித்த ஆபத்பாந்தவனே (ராமா)

ரு. தூணைப்பிளந்துநரசிங்கரூபமாய்துஷ்டன்குடல்பிடுங்கி
சிறியனைக்காத்துசிரஞ்சீவியென்று தேடிசகித்தவனே(ராமா)

சா. பாவியரக்கன்பாயாய்ச்சுருட்டி பாதாளஞ்சென்றபோது
பன்றிரூபங்கொண்டுபின்சென்று பாரத்தைக்காத்தவனே(ரா)

எ. தாயைப்பிரித்துச்சிறையில்விட்ட சண்டாளன்தம்பியென்றுபா
ராதே, சஞ்சலமில்லாமல்தனியாசுதந்து சதாகாலம்வாழ்வென்
[றாயே(ராமா)

அ. பதினாலாயிரம்கரதூஷணரைக் கண்டவர்களுடனே
தம்பியுமில்லாமல்தனித்துப்போர்செய்து க்ஷணத்தில்கொன்
[றாயே (ராமா)

கூ. மேகம்போலதிரண்டுவந்த மூலபலம்நடுவே
வேடிக்கையாகவேமோகனாஸ்திரத்தால்மோகிக்கவிட்டவனே

ய. மாதுதுரோபதை மனதில்நினைக்கச்சே
மாயமாகஓடிவந்து மானத்தைக்காத்தவனே (ராமா)

யக. ராமாராமாராமாவென்று நலிந்துபுலம்புகிறேன்
நாரணனே உன்செவியிலேறாம லிருப்பதென்கர்மமோ (ராமா)

யஉ. எந்தநாளைக்குஉன்னைத் துதிசெய்துஏங்கித்திரிவேனையா
கர்த்தனேகண்பார்த்துக்கவலைதீர்க்க உன்கையாலாகாதோ
[சொல்லாய் (ராமா)

யந. மாயாவதாரராமாராமாபிராமா எனக்குமார்க்கமெவ்விடமையா
நீவந்துஎன்னைஏமாற்றினாலும் நானுன்னைவிடுவதில்லைமெய்யா

யச. பரமபுருஷாஸ்ரீபத்மநாபா பார்தன்னில்வேதவல்லி
அரிவைபடுந்துயர்நீக்கி உன்றனருளுவாய்புல்லி (ராமா.)

## எஉ. இராகம்-வராளி-தாளம்-ஆதி.

### பல்லவி.

அப்பாரகுராமா என்னாலாகாது சொன்னேனையா.

### அநுபல்லவி.

இந்தவேதனை என்னால்முடியவில்லை
என்னைக்காவாமல்விட்டால் உன்னைவிடுவதில்லை(அப்பா)

### சரணங்கள்.

க. நான்மகாபாவி என்றுஎன்மன்னனையும்
மக்களையுமறைத்துப் புலம்பவிட்டாயே(அப்பா)

உ. அருமைசெல்வன்முகம்பார்த்துஆறியேனாயிருந்தேன்
அனலாய்முழங்க விட்டாயே(அப்பா)

ங. மனுவாகும்காலத்தில் என்கண்மணிசெல்வத்தை
கனமோசம் செய்தாயே(அப்பா)

ச. என்றுதெளியுமோ என்குறைஈடேற
எதிர்வந்துசொல்லாய் அப்பா(அப்பா)

ரு. ஒருவிதத்துன்பங்கள் உலகத்திலுண்டுஎன்னை
பலவிதத்துன்பங்களால் ப[illegible]படிசெய்தாயே(அப்பா)

சா. உனக்கென்னவஞ்சமோ
என்னைத்துடிக்கவைத்தாய்

எ. பாவிகள்வலதால் பதறித்துடிக்கின்றேன
பரிவாகநீவந்து வேதவல்லியைக்காவாய்(அப்பா.)

---

## எங. இராகம்-மோகனம்-அடதாளம்.

### பல்லவி.

ஐயாஉன்சூதிதுதானோ - ஓ - ஓ
யையாஉன்சூதிதானோ.

### சரணங்கள்.

க. ஐயாநீசூதனென் றறியாமலேயுன்னை
மெய்யாகவேநம்பினேன் பொய்யல்லபொய்யல்ல (ஐயா)

உ. தஞ்சமடைந்தபேனைத் தவிக்கவிடுவதும்
சண்டாளப்பாவிகளைத் தழைக்கும்படிசெய்வதும் (ஐயா)

ரு. மக்களுடன்கூடி வாழ்ந்தியாய்வாழ்வோர்கள்
வலதுபேசிபழிக்க வைத்தாயோராமாநீ (ஐயா)

௬. அய்யாஇதுசமைய மெய்யாய்உரைத்தபடி
கனிவோடருளுய்வாய் கருணாகரனேநீ (ஐயா)

௭. வில்லைப்பிடித்துஎன்ன வீரம்வேண்டியடைந்த
வெள்ளைக்கண்டிறந்து காப்பதல்லோசாரம் (ஐயா)

௮. உன்னுடையகுருதினால் அநேகமாய்சோதித்தாய்
பின்னுமெதிர்வந் தென்னைவுமாத்தினாய் (ஐயா)

௯. தம்பியுந்தேவியும் தானுமாகவந்து
தாயைஎன்னிடம்விட்டு சனுதிசென்றதுபொய்யோ (ஐயா)

௧௦. தாயுரைத்ததும்பொய்யோநீ தருவேனென்றதும்பொய்யோ
உரைத்ததற்குப்பலன் இன்றளவுங்காணேன் (ஐயா)

௧௧. முந்தினதலைமுறை மூதாதைசெய்ததும்
பிந்திநீயறியாயோ குலமுறைபோய்விட்டதோ (ஐயா)

௧௨. கௌசல்யபாலா கடுகிஓடிவந்து
கருணையுடன்பார்த்துக் கவலைகளைத்தீராய் (ஐயா)

௧௩. ராமாராமாவென்று நானவிவதைப்பாவிகள்
நங்கம்சொல்வதுனக்குப் பங்கமல்லவோராமா (ஐயா)

௧௪. ஆகாதார்முன்பாக அகதிதுடிக்கின்றேனென்ன
வேதனைகளைத்தீர்த்து வேதவல்லியைக்காப்பாய் (ஐயா.)

---

எச. இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

அய்யாநீகண்பாராய்-என்தனை-அய்யாநீகண்பாராய்.

அநுபல்லவி.

இன்னமுமிரங்காதோ உன்னெஞ்சம்
இரும்போகாரனென் செய்வேன்(அய்யா)

சரணங்கள்.

க. சதிகாரபாவிகளையாஇந்தத் தரணியிலாகாதுசொன்னேன்
சடுதியில்கைகொடுத்துக்காப்பாய் நீஎந்தனை(அ)

௨. தள்ளாதநாளையிலேயென்னையாளென்னைசதிசெய்வது தர்மமாமா
என்னாலாகாதுசொன்னேன் ஏன்மனம்துடிக்குதையா (அ)

௩. ஆற்றில்கரைத்தபுளிபோல் ஆனேனையா
அவதிசென்மமெடுத்து அரும்பாவியானேனையா (அ)

௪. வேகத்தில்வந்து காவாமேவிட்டால்
ஆரய்யாவேத வல்லிக்கிப்பார் (அ.)

---

௭௫. இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஆதி.

பல்லவி.

அம்மாஜானகியம்மா உனக்கு அருள்வாராதிருப்பதேன்சும்மா.

அநுபல்லவி.

இன்னமும்இரங்காதோ நெஞ்சம்
ஏன்இன்னமும் என்பேரில்வஞ்சம் (அம்மா)

சரணங்கள்.

௧. பார்தனிலென்னைவிடுத்தாய் பாலரையெல்லாம்பறித்தாய்
பாவிநானென்செய்வேனம்மா பார்த்தென்னைவஞ்சனைசெய்தாய்

(அம்மாஜானகி)

௨. மனமாரப்பட்டேனம்மா பாவியென்றுவழங்கவுங்கேட்டேன்
சதிகாரப்பாவிநானம்மாஇந்தத் தரணியிலிருக்கவொண்ணாது

(அம்மாஜானகி)

௩. லங்கைதனிற்சென்றுநீயும் நடுங்கினதுபோலவேநான்
திக்கற்றபாவிநானம்மா திகைப்பதுகண்டுநீவாராய்

(அம்மாஜானகி)

௨. பாவிநானினிஇந்தச்சன்மம் பார்தனில்ஆகாதுசொன்னேன
இனிநானிருக்கலாமோதாயே வேதவல்லிவந்துகாப்பாய

(அம்மாஜானகி.)

—:0:—

௭௬. அகவல்.

மன்னனும்தசாதன் மண்டலமாண்டிடப
பாலகன்இலையெனப் பதைத்துளமவாடி
வசிட்டரோடுரைசெய் மாமுநிதானும்

புத்திரகாமேஷ்டி பொருவறச்செய்யின்
பார்த்தனையாளப் பாலருண்டாமென
அவ்வுரைகேட்டேயருமகந்தொடங்க
அனந்தன்மேற்றுயிலு மமலனுமறிந்து
தேவர்கள்துயர்தீர் திதியிதுவென்று
நம்பியரோடுந் தரணிவந்துதித்தார்
வளருநாளதனில் மாமுனிபின்சென்
றடலருந்தாடகை யாருயிர்வீட்டி
அகலிகைக்குருவளித் தம்மிதிலையிற்போய்
சிவன்வில்லொடித்துச் சீதைமணமுடித்து
வரும்வழிதனில்மழு வாளியைவென்று
திருவயோத்தியினிற் சேர்ந்துபின்திருமுடி
சூடுகவென்று தொன்மைசால்தசரதன்
தாய்வரமளித்துத் தவஞ்செய்வேனென்று
கௌசல்யபாலா கருணைகடாக்ஷா
சாநகிநாதா தம்பியோடேகி
சடைமுடிதரித்து மாவுரியுடுத்து
மாதுஜாநகியுடன் வனத்துறைசென்று
குகனாற்கங்கைக் குளிர்நதிகடந்து
சித்திரகூடஞ் சேர்ந்துபின்பரதனுக்
கத்தனைப்பாதுகை யளித்தருந்தவர்கள்
ஆச்சிரமங்களை யடைந்தமரருக்குத்
துன்பந்தீர்ப்பேன் துயருளேவென்று
விராதனைவென்று மேவியபஞ்ச
வடியினைச்சேர்ந்துதன் வரவுபார்த்திருந்த
சூர்ப்பனகையைச் செவித்துணைமூக்கறுத்து
அவளால்வருங்கர னுருயிர்வாங்கி
மாதைப்பிரிந்து மான்பின்நடந்து
தேவியைநீங்கித் தேடித்திரிந்து
கழுகிறைசொல்லக் காரியமறிந்து
கவந்தனைவென்று சவரியையுகந்து
மாயவேடத்தொடு மயங்கித்திரிந்து
மாருதிநட்புறீஇ வாலியைக்கொன்று
சுக்கிரீவனுக்குச் சுடர்முடிசூட்டி
அநுமனாற்சாநகி யமரிடமறிந்து

ஆழ்கடலதனி லணையினைக்கட்டி
இலங்கைக்கேகி யிழிந்தராக்ஷஸரை
இராவணனுடனே யிராவகைமுடித்து
விபீஷணற்கரசை மேன்மையாயளித்துத்
தேவியைக்கூடித் தேவர்வரம்பெற்றுப்
புஷ்பகமேறிப் போம்பொழுதினிலே
சேதுமான்மியத்தைத் தெரியவிளம்பி
மீன்வழிபரத்துவன் மேவிடம்சேர்ந்து
அநுமனாற்பரத னருமனங்குளிரச்
சீதையொடுகூடித் திருஅயோத்தியினை
வந்தடைந்தன்று வசிட்டர்முன்னிலையில்
தேசாதிபர்க்குத் திருமுகமனுப்பி
நகரலங்காரம் நலம்பெறச்செய்தார்
கொலுமண்டபத்தைக் கோலம்புனைந்தார்
வாசனைத்தயிலம் வகையுடன்சேர்த்தார்
நாற்றிசைத்தீர்த்தமும் நலமுடன்கொணர்ந்தார்
கதம்பகஸ்தூரிகள் கனமுடன்கரைத்தார்
சீக்காய்நெல்லி சிறுபயறுடனே
கசகசாமஞ்சள் கனமுறவரைத்தார்
தசரதபாலா தயையுடனெழுந்து
கனமுடிகளைந்து காகுத்தராமா
அம்மைஜாநகியுட னாசனத்திருப்பாய்.

---

## நலங்கு.

௭௮. இராகம்-கேதாரம்-ஏகதாளம்.

பல்லவி.

தசரதபாலனுக்கும் ஜனகன்மகள்சீதையர்க்கும்
தெய்வக்கன்னிகைகள்வந்தார் சிறப்பாகநலங்கிட.

சரணங்கள்.

மாணிக்கக்கால்நாட்டி மரகதத்தால்பந்தலிட்டு
முத்தாலேஆலவட்டம் முற்றுமறைத்திருக்கும்(தசரத)

சந்தனமும்குங்குமமும் சாய்த்துத்தரைமெழுகி
முத்தாலேகோலமிட்டார் மொய்குழலாரோடிவந்து(தசரத)

ங. மாதர்கள்கூடிவந்து வகைவகையாய்த்தீபமிட்டார்
மாணிக்கத்தீபங்கள் வகைவகையாயலங்கரித்தார் (தசரத)

ச. அலங்கரித்தமண்டபத்தி லனேகவிதவாத்தியங்கள்
எங்குமுழங்குது எத்திசையுந்தானதிர (தசரத)

ரு. பரமபதமிதுதானோ பாற்கடலோ அயோத்திநகர்
கண்டு அதிசயித்தார் களிப்புடனே தேவரெல்லாம் (தசரத)

சா. மாணிக்கப்பலகையிட்டார் மணிவயிரப்பாய்விரித்தார்
முத்தாலலங்கரித்த முக்காலிமுன்னேயிட்டார் (தசரத)

எ. கஸ்தூரிகந்தபொடி கதம்பமஞ்சள்கற்பூரம்
சீதையர்க்கும்ஸ்ரீஹரிக்கு மிருவருக்கும்நலங்கெடுத்தார் (தசர)

அ. குங்குமப்பூச்சந்தனமும் குளிரபுனுகுஜவ்வாது
மங்கையர்கள்தட்டிலேவகைவகையாயலங்கரித்தார் (தசரத)

கூ. அலங்கரித்தபீடத்தில் அன்னைஜானகியுடனே
அபிராமர்வீற்றிருந்தார் அனைவர்களுஞ்சூழ்ந்தார்கள் (தசரத)

௰. தேவாதிதேவரெல்லாம் தெசரதருமந்தரத்தில
கண்டுகளித்தார்கள் களிப்புடனுசீர்வதித்தார் (தசரத)

௰க. தேசதேசத்தரசர் திருவுறுமயோத்தியர்கோன்
கண்படைத்தபலனின்று கண்டதென்றுதான்மகிழ்ந்தார் (தச)

௰உ. கானகந்தன்னில்சென்று காவலனைவென்றுவந்த
கர்த்தனேயுன்களைதீரக் கைகொடய்யாநலங்கிடுவோம் (தசர)

௰ங. வனவாசந்தனிற்சென்று மனக்கவலைப்பட்டுவந்த
மாதேயுன்துயர்தீரக் கைகொட்டம்மாநலங்கிடுவோம் (தசரத)

௰ச. இலங்கையதனிற்சென்றுஇராவணனைத்தான்வென்று
நலமுனிவர்க்கருளீந்த நாரணர்க்குநலங்கிட்டார் (தசரத)

௰ரு. அசோகவனக்காவலிலே அரக்கியர்கள்நடுவாகச்
சிறையிருந்துஜெயித்துவந்த சீதைக்குநலங்கிட்டார் (தசரத)

௰சா. தேவிசிறைமீட்டவர்க்கும் சீதாபிராட்டியர்க்கும்
திஷ்டிகழித்தார்கள் தேன்மொழிமாதரெல்லாம் (தசரத)

௰எ. மஞ்சள்நீர்தான்கரைத்து மங்களங்கள்தான்பாடி
மாதுஜாநகியார்க்கும் மாதவற்குஞ்சுற்றியிட்டார் (தசரத.)

## ௭௮. அகவல்.

தேவியுடன் திரு மஞ்சனஞ்செய்து
ஆடைகளைந்தலங் காரப்பட்டுடுத்தி
ஈரங்களைந் தெழிற்பீதாம்பரமுடீஇ
ஆற்றிமயிர்கோதி அகிற்புகைகொடுத்து
வாரிமுடித்து மாதர்சலித்தனர்
ஆபரணமெல்லா மலங்கரித்தார்கள்
நெற்றியிற்றிருமண் ணேர்படத்தரித்து
கண்மையிட்டு கனஜவ்வாதணிந்து
மல்லிகைமுல்லை மருவிருவாட்சி
செண்பகங்கொண்டு சேர்த்தலங்கரித்தார்
சிம்மாசனத்திற் சிறப்புடன்வைத்தார்
அந்தரதுந்துமி தும்தும்முழங்கிட
அமரர்பூமாரி யெங்குஞ்சொரிந்திட
தும்புருநாரதர் பம்பிசைபாடிட
அரம்பையூர்வசிவந் தழகாய்நடித்திட
தம்பிமாரிருவரும் சாமரைவீசிடப்
பரதன்குடைகொளீஇப் பண்பாய்க்களித்திட
கௌசலைமுதலினர் கண்களிகூர
வேதப்பிராமணர் வேதங்களோதிட
வசிஷ்டர்முடிதரிக்க மகிழ்வுடன்பெற்று
ஜெகமெலாங்கைக்கொளச் செங்கோல்கொண்ட
தசரதபாலா தகையுலகாள்வாய்
தாயேஜாநகி தகையுலகாள்வாய்
உம்மிருவோர்க்கு முறுகசீர்மங்களம்.

———:o:———

## ௭௯. சோபனம்.

இராகம்-சுருட்டி-தாளம்-ரூபகம்.

பூவைதசரத பூபதிக்குஞ்சோபனம்
புண்ணியஜனக பூபதிக்குஞ்சோபனம்
சீதாசமேதன் ஸ்ரீஹரிக்குஞ்சோபனம்
சிறுவர்தம்பிமார் மூவருக்குஞ்சோபனம்
மலரணிகோதைக்கும் மாதவற்குஞ்சோபனம்

அக. அகவல்.

கானகஞ்சென்று காய்கனிபுசித்து
களைபட்டுவந்த கருணாகடாக்ஷா
உனக்குஅப்பஞ் சிற்றுண்டியக்காரம்
பாலொடுதளிகைகள் பலவகைசேர்த்தேன்
முப்பழஞ்சர்க்கரை முந்திரித்திருத்தினேன்
ஆபத்பாந்தவா அங்கீகரித்து
ஆசார்யன்கையால் அமுதுபுசித்து
ஆயாசம்போய்ச் சந்தனாதிகளணிந்து
சந்தோஷமாயெழுந் தருளியதயாநிதி
பரமதயாளா பக்தவத்ஸலா
வேதவல்லிக்குன் பாதமதருள்வாய்.

———:o:———

## கும்மி.

அஉ. இராகம்-தாளம்-ரூபகம.

பல்லவி.

கும்மியடி பெண்கள் கும்மியடி - என்தன்
குலவிளக்கைவாழ்த்திக்கும்மியடி.

அநுபல்லவி.

நமமையெல்லாம்காக்கும் ராமபிரானை
நாடிக்கும்மியடியுங்கடி மனந்தேடிக்குமமியடியுங்கடி (கும)

சரணங்கள்.

க. தசரதராஜன் மகனாராம்-முன்பின்
சார்ந்துயாகம் முடித்தாராம்
மிதிலைக்குச்செல்லும் வழிதனிலேகல்லை
வீறுபெண்ணாக்கிய தானினராம் (கும்மிய)

உ. அந்தச்சனகன் மனையினிற்போய்ச்-சீதைக்
காகவில்லை ஒடித்தவராம்
ஜானகியைமணஞ் செய்துவரும்போது
பரசுராமன்கர்வம் வென்றவராம் (குமமிய)

ரூ. வந்தயோத்திநகர் சேர்ந்தவராம்-தந்தை
தந்தமுடிபரதாக் கீந்தவராம்
தாயின்சொல்லைக்கொண்டு சந்தோஷமாகவே
தான்வனவாசஞ்சென்று வந்தவராம (குமமிய)

௪. குகனைத்தோழனாகக் கொண்டவராம்-கொண்டு
கங்கைக்கரைதாண்டிச் சென்றவராம்
சித்திரகூடஞ்சென்று தம்பிபரதற்குத்
திருவடிதந்து வந்தவராம் (கும்மிய)

௫. சித்திரகூடமவிட்டுச் சென்றவராம்-ரிஷிகள்
சேர்ந்துதொழவருள் செய்தவராம்
விராதனைக்கொன்று பஞ்சவடிசேர்ந்த
வீரனைவாழ்த்திக் கும்மியடி (கும்மிய)

௬. சூர்ப்பநகையைப்பங்கஞ் செய்தவராம்-மிகு
சூரனுங்கரனையும் வென்றவராம்
மானின்பின்போயமானைத்தக் காணாமல்மயங்கின
மாதவனைவாழ்த்திக் கும்மியடி (கும்மிய)

௭ கழுகரசனைக் கண்டவராம்-கண்டு
காரியமுற்று மறிந்தவராம்
கவந்தனைவென்று சவரியையுகந்த
காகுத்தனைவாழ்த்திக் கும்மியடி (கும்மிய)

௮ அநுமனுமானைக்கண் டன்றுசுக்ரீவனை
யாண்டவனால் சீதைதேடியதிந
திலங்கையரசுந்த னைக்கொன்றுவிடணாக்
கெழிலரசீந்த வுபகாரராம் (கும்மிய)

௯ சீதையுடனநகர் சேர்ந்தவராம்-சேர்ந்து
சிந்தைமிகவும் குளிர்ந்தவராம்
தாயமாரைக்கண்டு நமஸ்காரமசெய்த
தாமோதரனென்று வாழ்த்துங்கடி (கும்மிய)

௰. தவிக்கின்றஅயோத்தி எங்குங்குளிர்ந்திடத்
தம்பிபரதன் மனமகிழ
வசிஷ்டாமுடிதரிக்கப் பெற்றிந்தவேத
வலவியைக்காத்திட நின்றவராம் (கும்மிய)

— o —

## ௮௩. ஏலப்பாட்டு.

ஏலேலோ ஸ்ரீராமா - ஏலேலோ - ரகுராமா - ஏலேலோ - பூமிதன னிலதசாதனா - வயிற்றில் - புத்திராய ஸ்ரீராமா - பரதா - சேமமிகு லட்சுமணா - சத்ருக்கா - செறிமுறைபுரி லவதரித் த - பிறைபோல

முடுக்கு.

வளர்கின்றநாளினில் வசிட்டமுனிதன்னால் - மூன்றாம்வயதினில் முத்துபாயசஞ்செய் - ஐந்தாம்வயதி லக்ஷராப்பியாசஞ்செய்து - ஏழாம்வயதி லுபநயநமியற்றி - பனிரெண்டுருவமும் பாங்காகச்சென்று - கோசிகன்பின்போய்க் குரூரமிகுந்த - தாடகையைச்சம்ஹரித்து ஸ்ரீராமச்சந்திரன் - அகலிகைக்குப்பழையவுரு அநுக்ஷணமேகொடுத்து - நிமிஷத்தில்ஜனகன்வில்லை நிமிர்த்துவளைந்தொடித்து - சீதையனைமணமுவந்து சேர்ந்துகைப்பிடித்து - எதிர்த்துவந்தபரசுராமன் ஏர்வில்லொடித்துப் - பட்டாபிஷேகஞ்செய்ய வயோத்திவந்துசேர்ந்தார் - ஏலேலோஸ்ரீராமா ஏலேலோரகுராமா. (க)

வயிரமுடி அயோத்திதன்னை - மிகவும் - மதிக்கப்பட்டஞ் செய்கவென்றார் - நகரை - அனைக்ஷணத்தில் அலங்கரித்தார் - கூனி - அருவரங்க ளிரண்டுங்கொள்ள - உடனே.

முடுக்கு.

பட்டமேபரதருக்குப் பாரமுடிநிறுத்தி - ஜனகன்மகள்சீதையனைச் சார்ந்துவனமனுப்பந் - காகுத்தன்தம்பியொடு மாவுரிதரிந்து ந் - கௌசலையின்பாதந்தன்னைக் களிப்புடனேபணிந்து - தெசரதரைதிருவடியைத் திருப்தியாய்வணங்கிச் - சிறையோரம்நதியோரம் சேர்ந்துவரந்தன்னு - மேகநிறவர்ண ஸ்ரீராமருடையகப்பல் - அரளத்துள்ளதூரத்திலே மெள்ளவரத்தன்னு - ஸ்ரீராமன்அயோத்தி திசைவந்தாரென்று - சித்திரகூடந்தன்னைச் சேர்ந்துவரத்தன்னு - ஏலேலோஸ்ரீராமா ஏலேலோரகுராமா. (௨)

ஸ்ரீராமர் போனபின்பு - துயரால் - தெசரதரும் போய்மறைந்தார் - உயர்ந்த - மந்திரிகள் அறிவிக்கப் - பரதர் - வந்தடைந்தார் அனைக்ஷணத்தில் - புலம்பி.

முடுக்கு.

தந்தைதகடன்முடித்துச் சடைமுடிதரித்து - ரகுபதியைநானுமிப்போ தழைக்கிறேனென்று - வசிஷ்டர்முதலோருடன் கங்கைக்கரைதாண்டி - மனமுருகிப்பரதர் ராமனடிபணியத் - தந்தைசேர்ந்து யறிந்து ரகுராமர்புலம்ப - வசிஷ்டரால்மனந்தேறித் தந்தைதகடன் முடித்துப் - பரதன்தன்முகம்நோக்கி ஸ்ரீராமர்சொல்வார் - முடிதரிக்காமலேன் சடைதரித்தாயென்று - ஸ்ரீராமர்கேட்டிட பரதன்மனம்நொந்து - சண்டாளிவயிற்றில் ஜன்மித்தநானும் - பரதவஞ்சிர

யனைவனும் ஸ்ரீராமாநீயும் - அயோத்திககாளை வருவாயபிர
அதுகேட்டுஸ்ரீராமர் பதினாலுவருஷம் - போய்மீண்டுவருகிறேனினி
போபரதவென்று - பரிவுடன்பாதுகை யளித்திடப்பெற்று - நந்
திகிராமந்தன்னில் நல்லமுடிசூடி - வழிபார்த்துப்பழிகழித்துப் பா
தருமிருந்தார் - ஏலேலோஸ்ரீராமா ஏலேலோரகுராமா. (௩)

சித்திரகூடம் விட்டுவரும் - வழியில் - சேர்ந்தவிரா தனைக்கொன்று - உயர்ந்த - தத்துவ முனிவருக்கு - அபயம் - தந்தகஸ்தியராச்சிரமம் - சேர்ந்து.

முடுக்கு.

தந்தபடைகொண்டுஜா னகியுடன்பஞ்ச - வடிசேர்ந்துசூர்ப்ப
நகை வாதாடும்போது - தம்பியவள்செவிமூக்கு தம்மையறுத்திட்
டார் - கரதூஷணதியர் கடுகியேவந்தார் - அனைவரையும்ஐயனவ
னை நிமிஷத்தில்வென்றார் - அதுகண்டரக்கியும அண்ணனிடஞ்சொ
ன்றாள் - அவள்வரவைக்கண்டரக்கன் அதிகமனஞ்சீறி - மாரீசனை
யழைத்து மானாய்விடுக்க - மன்னன்ராமச்சந்திரன் மான்பின்னோட ந
க - தசரதராமனும் அமபொன்றுதொடுக்க - அபயமிட்டேமான்
அலறிவிழக்கேட்டு - இளையவர்பின்செலல இதுசமயமென்று - அம
மனைமண்ணுட னெடுத்துவரும்போது - கழுகரசனைக்கண்டு கனயு
த்தஞ்செயது - அசோகவனககாவலில அம்மனையிருத்தினான் - ஏ
லேலோஸ்ரீராமா ஏலேலோரகுராமா. (௪)

ஸ்ரீராமர் தம்பியுடன் - பிரியாச் - சீதையைக் காணமல்மனம் - தளர்ந்து - தேடிவரும் வழியில் - கழுகரசைச் - சிக்கெனவே கண்டுவெந்து - கொடிய.

முடுக்கு.

கவந்தனைத்தான்வென்று கனிகளையளித்த - சபரிக்குமுத்தி
யைத் தந்தனுமானை - கண்டுவாலியைக்கொன்று கனசுக்ரீவற்கு -
முடிசூட்டிமாருதியை முன்னேயனுப்பிச் - சீதையிருப்பறிந்து
சேனைக்கடலோடு - தென்கடலைத்தாண்டிமிகு தீமைபுரிகின்ற - ரா
க்ஷதர்களைக்கொன்று ராவணனைவென்று - விபீஷணர்க்கரசீந்துமெ
ல்லியளையுகந்து - புஷ்பகவிமானமேறிப் போய்அயோத்திசேர்ந்து-
மனமுவந்துபாதனும் பாதம்பணிந்து - வசிஷ்டர்முதலோர்கூடி
மகுடமுடிசூட்டி - மனங்களித்துயாவரும் மங்களங்கூற - பட்டாபி
ஷேகங்கொண்ட பட்டாபிராமா - பார்த்தெனையாளுகின்ற பக்தவ
த்சலனே - பார்த்துவேதவல்லிக்குன் பாதமருள்வாயே - ஏலே
லோஸ்ரீராமா ஏலேலோரகுராமா. (௫)

## அ௪. அகவல்.

ஸ்ரீரகுராமா சேதியொன்றுரைப்பேன்
அப்பனே அநாதனே அன்புடன்கேளாய்
உன்னடியடைந்த வென்மனநோயை
ஆருடன்சொல்லுவேன் ஐயனேநானும்
காத்தனேநெஞ்சம் கலங்குதென்செய்வேன்
மைந்தன்முன்சென்று மனவேதைதீர்ப்பாய்
இக்கலியுகத்தி லெங்குநீயொளித்தாய்
பக்தனைக்காக்கப் பணடுவேடம்பூண்டு
பரியுடன்சென்று காத்ததும்பொய்யோ
பக்தரைக்காக்கும் பக்தசகாயா
உனைநம்பினபேர்க் கொருகுறையுறுமோ
மாருதியுடனே மாதவாநீயும
முன்னாகச்சென்று முதல்வனாய்நின்று
துஷ்டரையெல்லாம் துரிதமாய்த்திருத்திச
சத்ருக்களைநீ சடுதியில்விலக்கி
அடியவர்க்கிரங்கி அனுக்ரகஞ்செய்து
சிறியனைக்காத்துச் செயங்கொண்டுவருவாய
குறைவிலாஸ்ரீஹரி கோவிந்தாவுனை
அறிவொன்றுமில்லா வாயர்குலத்தாள்
மனவேதமாய்க்க வணங்கித்தொழுதேன்
குற்றமபாராமல் குறைதீர்த்துக்காப்பாய
பாஞ்சாலிக்கருள் பரமதயாளா
ஆபத்தைக்காக்கும் ஆபத்பாந்தவா
வேதவல்லியைவிரைந் தருளல்நின்கடனே.

---

## அ௫. லாலி.

க. திருவாடிப்பூரத்தில் செகத்துதித்தாய்நீயே
பெரியாழ்வார்கண்டெடுத்த பெண்பிள்ளையாயே (லாலி)

உ. துளசிவனத்தினி லுதித்தஅாயவளாம்தாயே
சூடிக்கொடுத்த சுடர்க்கொடியும்நீயே (லாலி)

ந. ஸ்ரீரங்கதாமரொடு சேர்ந்திருப்பாய்நீயே
சிறந்தவரங்களைக்கொடுக்கும் சீர்த்தியுள்ளதாயே (லாலி)

௪. என்னபிழைசெய்தேனம்மா எனைப்பெற்றதாயே
ஏழைநான்செய்தபிழை பொறுத்தருள்வாய்நீயே (லாலி)

௫. வேதவல்லிதனக்கிரங்கி விரும்பியதையீந்து
ஆதரித்தெனையிப்போ தளிப்பாய்நீபோந்து (லாலி.)

—:o:—

## ௮௫. எச்சரிக்கை.

௧. சீருள்ளவயோத்திதன்னில் தெசரதற்குப்பாலனாகித்
தவமுனிவன்பின்சென்ற குராமா (எச்சரி)

௨. தாடகையைவதைசெய்து மிதிலைவழிதன்னில்
கல்லைப்பெண்ணாக்கின காகுஸ்தராமா (எச்சரி)

௩. பெருத்தவில்லொடித்துச் சீதையைமணஞ்செய்து
வழியில்பரசுராமனை வென்றரகுவீரா (எச்சரி)

௪. தாய்வரந்தனைக்கொண்டு தம்பிசீதைகளுடன்
கானகந்தனிற்புகுந்த காருண்ணியா (எச்சரி)

௫. துஷ்டர்களைக்கொல்வேனென்று முனிவர்க்கருளீய்ந்த
இஷ்டவிபீடணனைக்காத்த கோதண்டராமா (எச்சரி)

௬. இராவணனைக்கொன்று தேவர்வரம்பெற்று
ஜானகியையுகந்த சீதாராமா (எச்சரி)

௭. வந்தயோத்திசேர்ந்து பரதனுளங்குளிர
வசிஸ்டர்முடிதரிக்கப் பெற்றபட்டாபிராமா (எச்சரி)

௮. அன்பாயுன்றனையடைந்தே னையாவேதவல்லியெனும்
அடியாளுக்கநுக்கிரகிப்பாய் அயோத்திராமா (எச்சரி.)

## மங்களம்.

௮௬. இராகம்-பந்துவராளி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

மங்களம் சுப மங்களம்
நித்யமங்களம் ஜெய மங்களம்.

அநுபல்லவி.

தங்குமயோத்தியில் தசரதபாலனுக்கு (மங்களம்)

சரணங்கள்.

க. பூமகள்ஜானகிக்கும் புகழ்ஸ்ரீராமனுக்கும்
வானவர்தேவனுக்கும் வசிஷ்டர்முதலானோர்க்கும் (மங்க)

உ. தாரணியாளும்தசரதற்கும் தாய்மார்கள்மூவருக்கும்
தம்பிமார்க்கும்தேவிகட்கும் நம்புசுமந்திரற்கும் (மங்க)

ங. அருமறைவேதங்களுக்கும் அன்பாமடியவர்க்கும்
மண்டலத்திலுள்ளபேர்க்குமங்கைவேதவல்லிக்கும்(மங்க.)

---

அ௭. மங்களம்.

பல்லவி.

தசரதபாலருக்கும் ஜயமங்களம்
ஜனகன்சுபுத்திரிக்கும் ஜயமங்களம்.

சரணங்கள்.

க. நித்தியசீதாசமேதனுக்குச் சுபமங்களம்
பரமபதநாதனுக்கும் பாற்கடல்வாசனுக்கும் (மங்க)

உ. அருமறைவேதங்களுக்கும் அமரருக்குமங்களம்
வால்மீகர்கௌசிகர் மற்றுமுள்ளமுனிவருக்கும் (மங்க)

ங. வசிஷ்டர்முதலானோருக்கும் மாதவர்க்குமங்களம்
தசரதபாலனுக்கும்ஜயமங்களம் நித்தியசுபமங்களம் (மங்க)

ச. தசரதபாலனாய் சீதைமணஞ்செய்தவர்க்கும்
கானகஞ்சென்றுவந்த கர்த்தனுக்கும் (மங்க)

ரு. தங்குபுகழ்தசரதர்க்கும் தாய்மார்கள்மூவருக்கும்
தம்பிமார்கள்மூவருக்கும் தாமோதரனுக்கும் (மங்க)

சு. ரவிகுலவீரனுக்கும் ரக்ஷகுலகாலனுக்கும்
நகரெங்குமுள்ளவர்க்கும் நல்லமந்திரிமார்க்கும் (மங்க)

எ. அனுமான்சுக்கிரீவனுக்கும் அரியவிபீஷணற்கும்
அன்பாயுனதடியை யடைந்தவேதவல்லிக்கும் (மங்க.)

## ௮௮. மங்களம்.

பல்லவி.

மங்களம் ஜெய மங்களம்.

சரணங்கள்.

க. தெசரதர்பாலனாய் சீதையைமணஞ்செய்து
ஆரண்யஞ்சென்றுரா வணனைவென்றானுக்கு (மங்க)

உ. விபீஷணற்கரசீய்ந்து சீதையுடன்வந்து
பட்டாபிஷேகங்கொண்ட பட்டாபிராமனுக்கு (மங்க)

௩. பாதம்பணிந்து பரிவுடன்கொண்டாடும்
வேதவல்லியைக்காக்கும் வீரரகுராமனுக்கு (மங்க)

———:0:———

## ௮௯. இராகம்-பரசு-சாபுதாளம்.

பல்லவி.

கிருஷ்ண மங்களம் மங்களம் - ஸ்ரீஹரி
கோபாலமங்களம் மங்களம்.

சரணங்கள்.

க. க்ஷீராப்திதன்னில் திருவாலிலைமீதில்
திருக்கண்வளர்ந்தருளும் ஸ்ரீஹரியே
துஷ்டர்களைக்கொன்று இஷ்டர்களைக்காக்கத்
திருவடமதுரையி லுதித்தருளிய ஹரி (கிருஷ்)

உ. மாசில்வசுதேவர்க்கு மைந்தனாகத்தோன்றி
மாயையினாலேசீர்க் கோகுலம்புகுந்து
கூசுமசோதைசேயாய் லீலைகளைச்செய்து
குன்றெடுத்தாயரைக் காத்தருளும்ஹரி (கிருஷ்)

௩. கல்விகளைக்கற்பித்த வேதியற்கன்று
கஷ்டங்கள்தீரப் பாலகனைத்தந்தாய்
கஞ்சனைக்கொன்று களிப்புடன்முடிசூட்டிக்
கூனியுடன்ருக்மணியை மணஞ்செய்தஸ்ரீஹரி (கிருஷ்)

௪. பஞ்சவர்களைக்காக்கத் தூதாகச்சென்று
பாரதம்முடிக்கச் சாரதியஞ்செய்து

பாஞ்சாலிசபதத்தைப் பக்ஷமுடன்முடித்துப்
பக்தர்களைக்காக்கும் பத்மநாபாஹரி (கிருஷ்)

௫. நம்பினேன்நம்பினேன் நந்தகுமாரா
நல்லமனதுடனென்பாற் கிருபைகூர்ந்து
அம்புவியிற்பிறந் தலையுந்துயர்களைந்து
ஆதரிப்பாய்வேத வல்லியைஸ்ரீஹரி (கிருஷ்.)

———:o:———

௬௰. தோத்திரம்.

ஓ ஆதிமூலமே.
ஓ ஆபத்பாந்தவா.
ஓ அநாதரட்சகா.
ஓ சத்ருசம்ஹாரா.
ஓ பதிதபாவனா.
ஓ பாபவிநாசநா.
ஓ பரமபுருஷா.
ஓ பாற்கடற்றுயில்வோய்.
ஓ அசலப்ரதாபா.
ஓ அநந்தசயனா.
ஓ அயோத்திஸ்ரீராமா.

ஓ சீதாசமேதா திக்குவேறில்லை.
மக்களைச்சதிசெய்த மாதவாகேசவா.
கரியாதிமூலமெனக் கடுகிஓடிவந்து.
காத்ததும்பொய்யோ கனநீலவண்ணா.
அறியாதபாலன் அரியென்றபோதே.
அவனைரட்சித்தது அனைத்துமேபொய்யோ.
மராமராவென்ற வனவேடன்றன்னை.
மாமுனியாக்கி ரட்சித்ததும்பொய்யோ.
தடத்தினிற்கிடந்த தடங்கலின்சாபம்
நடுத்துரட்சித்ததும் தரணியிற்பொய்யோ.
விடவொண்ணாத காகாசுரனுக்கோர்.
கண்தனைவிடுத்து ரட்சித்ததும்பொய்யோ.
தாயைப்பிரித்த சண்டாளன்தம்பிக்கு.
தனியரசதனைத் தந்ததும்பொய்யோ.
கன்னியாந்திரௌபதி கதறினபோது.

கடுகிவந்து காத்ததும்பொய்யோ.
மாபாவியானநான் வருந்திமுறையிடல்.
உன்காதிலேறவில்லை யோகோகோகர்த்தனே.
கடுகிவாராயோஎன் கண்கலக்கம்பாராயோ.
என்கண்மணிசெல்வனை யென்கண்ணில்காட்டாயோ.
கைகொடுத்துவேதவல்லியைக் காப்பாய்கருணாநிதியே.

இராகம்-காம்போதி-ஏகதாளம்.

பரமபதம்வாழியுயர் பாற்கடல்தான்வாழியே
பண்புறுசிரநந்தனொடு பகர்கருடன்வாழியே
விஷ்வக்ஸேநன்வாழி விசுவேசன்வாழியே
விறுடையநித்யமுக்த விபுதர்குழாம்வாழியே
ஆழியுஞ்சங்கமும்வாழி அம்பும்வில்லும்வாழியே
அன்னைஜானகியென்னு மழிவில்லாள்வாழியே
அன்னையர்மூவரும்வாழி யகிலமெலாம்வாழியே
அருமறையிற்பகர்தரும மாதியவும்வாழியே
சீருள்ளவயோத்தியர்கோன் தசரதனும்வாழியே
ஸ்ரீராமன்தான்வாழி சிறந்தபின்னோர்வாழியே
பாரிலுறுமுயிர்களெலாம் பண்புடனேவாழியே [யே
பகர்சொல்லும்பொருளுமாய்ப் படர்ந்துநின்றோன்வாழி
அப்பனுக்குச்சங்காழி அளித்திட்டோன்வாழியே
ஐயனும்தான்வாழி யவனன்பர்களும்வாழியே
திவ்வியவட்டாக்ஷரமாந் திருமந்த்ரம்வாழியே
தேசிகர்களெல்லாரும் திகழ்ந்தென்றும்வாழியே
ஆழ்வார்கள்மணவாள மாமுனிகள்வாழியே
அரியஸ்ரீசைலமென்று மழிவிலதாய்வாழியே
தாழ்விலாஅண்ணனடி சத்தியமாய்வாழியே
தனைமீதில்வைணவநற் சமயமென்றும்வாழியே
பக்தர்குழாம்வாழியுயர் பாகவதர்வாழியே
பாருள்ளோர்யாவருமோர் பழியிலராய்வாழியே
சிந்தமதினினைவேத வல்லியொடுற்றோர்கள்
திகழ்சந்திராதித்தர் செறியளவும்வாழியே.

# கீர்த்தனைகளின் அகராதி.